

















# Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.
Because it's never too early to be a hero.





இந்தியப் புராதனக் கதைகள் 27



நவீன வேதாளக் கதை 19



மர்மக்குளம் 13



விநாயகர் 45



## பொருளடக்கம்




SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/-
இந்தியாவிற்குள் ரூ.120/-
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
**சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# நிரந்தர அமைதி நிலவட்டும்!

மனித இனம் அமைதி நிலவ வேண்டும் என்றே இன்பக் கனவு காண்கிறது. அனைவரும் இதற்காக அவ்வப்போது பாடுபட்டே வருகிறார்கள். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் ஆசியக் கண்டத்தின் இரு பெரிய நாடுகளான இந்தியாவும் சீனாவும் நல்ல அண்டை நாடுகளாய் நேசமுடன் வாழத் தீர்மானித்தன. அப்போதைய இந்தியப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு, சீனப் பிரதமர் சூ-என்-லாயை நம் நாட்டிற்கு அழைத்தார். ஏராளமான மக்கள் திரண்டு வந்து வரவேற்று ஹிந்தி-சீனி பாயி பாயி என்று கோஷங்களையும் எழுப்பினார்கள். இந்தியாவும் சீனாவும் பஞ்சசீல உடன்படிக்கை செய்து கொண்டன.

நேருவும் இதற்கு மூன்று மாதங்களுக்குப் பிறகு சீனாவிற்குச் சென்றார். அவருக்கும் அந்நாட்டில் நல்ல வரவேற்பு கிடைத்தது. பழங்காலத்து உறவு மீண்டும் துளிர் விட்டு வளரும் என யாவரும் எதிர்பார்த்தார்கள். முன்பு புத்த மத ஆசிரியர்களான கஸ்யப மதங்கரும், தர்ம ரட்சகரும் இதுபோல இரு நாடுகளிடையே நல்லுறவை ஏற்படுத்தினார்கள். ஆனால் அண்மையில் ஏற்பட்ட இந்த உறவில் விரிசல் கண்டது. சீனா திடீரென 1962ல் தன் படைகளை அனுப்பி இந்திய எல்லையில் சில பகுதிகளை ஆக்கிரமித்தது. அதன் பிறகு போர் நிறுத்தம் ஏற்பட்டது.

இப்போது மீண்டும் இந்தியாவும் சீனாவும் நல்லுறவை ஏற்படுத்திக் கொண்டுள்ளது. நம் பிரதமர் ஸ்ரீ அடல்பிஹாரி வாஜ்பேயி சீனாவிற்குச் சென்று நல்லெண்ணத்தை யாவர் மனதிலும் நிலைநாட்டிவிட்டு வந்துள்ளார். அவரது இச்செயல் வருங்காலத்தை வளமாக்கும் எனவே யாவரும் விரும்புகிறார்கள். அந்த விருப்பம் நிறைவேறட்டும்!

Visit us at : http://www.chandamama.org
ஆசிரியர் : வீஸ்வம்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்**

# இந்திய மாவீரர்கள் - 23

**நம் தேசிய விடுதலை இயக்கத் தலைவர்களைப் பற்றிய வினாக்கள் இவை. அவர்களை நீங்கள் அறிவீர்களா?**

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. நான் *1920*லிருந்து *1947*க்குள் பத்து ஆண்டுகள் சிறையில் கழித்தேன். நான் இந்தியாவின் முதல் பிரதம மந்திரி. நான் யார்?

------------------------------------------------

2. நான் 'அபினவ் பாரத்' என்ற உலகப் புரட்சி அமைப்பைத் தொடக்கியவன். நான் மராட்டியில் 'இந்திய சுதந்திரத்தின் முதலாவது போர்' என்ற வரலாற்று நூலை எழுதியவன். நான் யார்?

------------------------------------------------

3. 'இந்தியாவின் இரும்பு மனிதர்' என யாவராலும் அறியப்பட்ட நான் யார்?

------------------------------------------------

4. நான் லார்ட் ஹார்டிஞ் *1912*ல் நடத்திய ஊர்வலத்தில் வெடிகுண்டு வீசியவனாகக் கருதப்பட்டவன். நான் யார்?

------------------------------------------------

5. நான் பீகாரில் *1930*ல் உப்பு சத்தியாக்கிரகத்தைப் பரவலாக நடக்கச் செய்தவன். இந்தியக் குடியரசின் முதல் குடியரசுத் தலைவரான நான் யார்?

------------------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியத் தலைவர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய விடுதலை இயக்கத் தலைவர் ....................
..........................................................
..........................................................

போட்டியாளரின் பெயர்: ..............................
வயது: .................... வகுப்பு: ....................
முகவரி: ..............................................
..........................................................
பின்கோடு: .................... போன்: ....................
போட்டியாளரின் கையொப்பம்: ..............................
பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி - 23**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
*நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி*
*ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097*
*அனுப்ப வேண்டிய கடைசித் தேதி செப்டம்பர் 5, 2003*

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

**இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்**



# புத்திசாலிப் பெண்

வீணாவுக்கு ஓய்வே கிடையாது. பள்ளி முடிந்த பிறகு ட்யூஷனுக்குப் போக வேண்டும். டியூஷன் வகுப்பு அவள் வீட்டிலிருந்து இரண்டு தெரு தள்ளி இருந்தது. வழக்கமாக அம்மா அவளை ஸ்கூட்டரில் அங்கே கொண்டு போய்விட்டு அழைத்து வருவாள்.



ஒருநாள் வீணா யோசித்துப் பார்த்தாள். "எனக்காகத் தானே அம்மா நான்கு தடவை ஸ்கூட்டரில் வர வேண்டியிருக்கிறது? தனி வகுப்பில் விட்டுவிட்டு, வீட்டுக்குப் போய், திரும்பவும் வந்து என்னை அழைத்துப் போய்... எத்தனை பெட்ரோல் வீணாகிறது? ட்யூஷன் வகுப்புப் பக்கத்தில் தானே நடக்கிறது? நான் மிதி வண்டியிலேயே போய் விடலாமே?"

அம்மாவிடம் சொன்னாள் : "அம்மா, இனிமேல் என்னை நீ ட்யூஷன் வகுப்புக்கு ஸ்கூட்டரில் அழைத்துப் போக வேண்டாம். நான் மிதிவண்டியில் போய்க் கொள்கிறேன். பெட்ரோலும் மிச்சம். உடலுக்கும் ஆரோக்கியம்."

அம்மா மிகவும் மகிழ்ந்து போனாள். இப்போது வீணா ட்யூஷனுக்கு மிதி வண்டியில் போய் வருகிறாள்.

நீங்கள் கூடப் பெட்ரோலை மிச்சப்படுத்துவது எப்படி என்று சிந்திக்கலாம்.

விலை மதிப்புள்ள பெட்ரோல் தற்போது அதிக அளவில் இல்லை. பெட்ரோலைச் சேமித்து இந்த உலகத்திற்கு நாமும் நம்மால் ஆன உதவியைச் செய்வோம்.

# நிழலும் வெயிலும்

நல்லசாமி பெரிய வியாபாரி. வியாபாரத்தில் அவருக்கு லட்சலட்சமாக லாபமே கிடைத்து வந்தது. இருந்தும் அவர் எளிய வாழ்க்கையே வாழ்ந்து வந்தார். சாதாரண நூலாடைகளைத்தான் அணிந்து வந்தார்.

அவரிடம் வேலை செய்து வந்த பழனி அவ்வப்போது ''ஐயா! நீங்களும் மற்ற பணக்காரர்களைப்போல ஏன் பகட்டாக இருக்கக் கூடாது? பட்டாடைகளை அணிந்து வசதிகளோடு வாழ்ந்து சுகபோகங்களை அனுபவிக்கலாமே!'' என்று கூறி வந்தான். ஆனால் நல்லசாமி அப்போதெல்லாம் சிரித்துவிட்டு பதில் கூறாமலேயே இருந்து வந்தார்.

திடீரென்று நல்லசாமிக்கு வியாபாரத்தில் பெரும் நஷ்டம் ஏற்பட்டது. அதனால் அவரது சொத்து, பணம் எல்லாம் அநேகமாக அழிந்தே போய் விட்டது. இதைக் கண்ட பழனியின் கண்களில் கண்ணீர் ததும்பியது. அவன் அவரிடம் ''ஐயா! எவ்வளவு பெரிய பணக்காரராக இருந்த நீங்கள் இப்படித் தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டீர்கள். இதற்கு ஏற்ப எப்படித் தான் வாழப் போகிறீர்களோ?'' என்று வருத்தப்பட்டவாறே கேட்டான்.

அதுகேட்டு நல்லசாமி சிரித்தவாறே ''பழனி! நான் என்றுமே பணக்காரன் போல வாழவில்லை. நிறையப் பணம் இருந்தபோதும் ஏழை போலத்தான் வாழ்ந்தேன். சுகதுக்கம் நிழலையும் வெயிலையும் போன்றது. இவை மாறிமாறி வருவது போலத்தான் வாழ்க்கையிலும் நடக்கிறது. சுகப்படும் போது மற்றவர்களுக்கு நாம் உதவினால் கஷ்டப்படும் போது நமக்கு அவர்கள் உதவுவார்கள். நான் முன்பு சிலருக்கு உதவினேன். அவர்கள் இப்போது எனக்கு உதவுகிறார்கள். இதுதான் வாழ்க்கையின் ரகசியம்,'' என்றார். விரைவிலேயே நல்லசாமி வியாபாரத்தில் முந்தைய நிலைக்கு வந்துவிட்டார்.





# ஆசியே சாபம்!

**க**ல்லூரின் கிராம அதிகாரி கஜபதி. அவன் மிகக் கொடியவன். அவன் பல அக்கிரமங்களைச் செய்து ஊர் மக்களை பயமுறுத்திப் பணம் பறித்து வந்தான். அவனுக்கு அரச சபையிலுள்ள சில அதிகாரிகளின் ஆதரவு இருந்ததால் மக்கள் அவனைப் பற்றி புகார்கள் கூறியும் அவை எடுபடாமல் போயின.

அந்த ஊரில் பஞ்சாட்சரம் என்பவன் இருந்தான். அவன் தன் ஊருக்கு வரும் சாது சன்னியாசிகளைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் உபசரித்து அவர்கள் கூறும் அறிவுரைகளைக் கேட்கக் கூட்டங்களையும் ஏற்பாடு செய்து வந்தான்.

ஒருநாள் சத்தியதேவர் என்ற யோகி கல்லூருக்கு வரவே, பஞ்சாட்சரம் அவரை வரவேற்றுத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

சத்தியதேவர் சக்திவாய்ந்த மகான். அவர் எதைச் சொன்னாலும் அது பலிக்கும். அவரது அறிவுரைகளைக் கேட்க பஞ்சாட்சரம் வழக்கம் போலத் தன் வீட்டில் ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தான். அப்போது பலர் அவரிடம் கிராம அதிகாரி கஜபதி செய்யும் அக்கிரமங்களைக் கூறி அதற்கு முடிவு கட்டுமாறு வேண்டினார்கள்.

சத்தியசீலரும், ''கவலைப்படாதீர்கள். நீங்கள் நேர்வழியில் சென்றால் அந்த கஜபதியால் எதுவும் செய்ய முடியாது. அவனை லட்சியம் செய்யாமல் இருங்கள்,'' என்றார். மக்களும் அவர் கூறியபடி நடந்து கஜபதியை அலட்சியம் செய்தார்கள்.

ஒருநாள் ஒரு விவசாயி ஓடிவந்து சத்திய சீலரைக்கண்டு ''ஐயா! என் மாடு தன் வயலில் புகுந்து பயிரை மேய்ந்துவிட்டதாகக் கூறி அதை கஜபதி பிடித்து வைத்திருக்கிறான். அதற்கு நூறு வராகன்கள் அபராதம்

- சிவனார் செல்வன் -



செலுத்தாவிட்டால் நான் ஊரை விட்டே போய்விடவேண்டுமாம். நீங்கள்தாம் என்னை அவனிடம் இருந்து காப்பாற்ற வேண்டும்,'' என்று வேண்டினான்.

சத்தியசீலரும் ''கவலைப்படாதே! கடவுள் உனக்கு துணைபுரிவார்!'' என்றார். அன்று மாலை அந்த விவசாயி தன் வீட்டுக் கொல்லைப் புறத்தில் செடிகளுக்குப் பாத்தி கட்டக் குழி தோண்டியபோது ஒரு சிறு பித்தளைக் குடம் கிடைத்தது. அதை அவன் தன் வீட்டிற்குள் எடுத்துக் கொண்டு போனான். அதிலிருந்து ஒரு தங்க நாணயத்தை எடுத்து கஜபதியிடம் கொடுத்துவிட்டு தன் மாட்டை மீட்டு வந்தான்.

ஏழை விவசாயிக்கு தங்க நாணயம் கிடைத்தது என்றால் அவனுக்கு புதையல் கிடைத்திருக்க வேண்டும் என்று கஜபதி ஊகித்துவிட்டான். எனவே அவன் தன் ஆட்களுடன் விவசாயியின் வீட்டிற்கு வந்து சோதனை போட்டான். தங்க நாணயங்கள் நிறைந்த செப்புக் குடத்தைக் கண்டு ''இது அரசாங்கத்திற்குச் சேர வேண்டியது!'' எனக் கூறி அவன் அதைத் தன் வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போனான்.

அதை அவன் தன் இரும்புப் பெட்டகத்தில் வைத்தபோது திடுக்கிட்டுப் போனான். ஏனெனில் அதில் தங்க நாணயங்களுக்கு பதிலாக தேள்களும், நண்டுகளும், நட்டுவாய்க் காளிகளும் இருந்தன. கஜபதி என்ன செய்வது என்று தெரியாமல் மலைத்து நின்றான்.

பஞ்சாட்சரத்தின் நண்பன் ராமசாமி. அவனது மகள் கீதா. அழகியான அவளை போக்கிரியான தன் மகனுக்குக் கல்யாணம் செய்ய கஜபதி விரும்பினான். இதை விரும்பாத ராமசாமி சத்தியசீலரிடம் முறையிடவே அவரும் ''கவலைப்படாதே. கடவுள் உனக்குத் துணைபுரிவார்'' என்று கூறி அனுப்பினார்.

இரண்டு நாட்களுக்குப் பின் தலைநகரில் இருந்து அரசாங்கப் பொக்கிஷதாரர் கல்லூருக்கு வந்தார். அவர் ராம சாமியைக் கண்டு அவனது மகளைத் தன் மகனுக்கு விவாகம் செய்து கொள்வதாகக் கூறினார். அவரது மகன் கஜபதியின் மகனைப் போல இராமல் அழகனாயும் நற்குணங்கள் கொண்டவனாகவும் இருந்தான். சத்தியசீலரின் முன்

னிலையில் அந்த விவாகம் சிறப்பாக நடைபெற்றது. அரசாங்க உயர் அதிகாரியின் மகனின் திருமணம். எனவே கஜபதியால் அதைத் தடுத்து நிறுத்த முடியாமல் போயிற்று.

அப்போது கஜபதிக்கு சத்தியசீலர் சக்தி வாய்ந்தவர் என்பதும் அவர் சொல்வது அப்படியே நடக்கிறது என்பதும் புரிந்தது. அவன் அவரைக் கண்டு "சுவாமி! தாங்கள் ஒருவருக்கு நல்லது நடக்க வேண்டும் என்று எண்ணி ஆசிகள் அளிக்கிறீர்கள். அது அப்படியே நடந்துவிடுகிறது. எனவே எனக்கும் தங்களது ஆசி களை அளியுங்கள்!" என்றான்.

அவரோ, "எனக்கு ஒரு சக்தியும் இல்லை. எவருக்கும் கடவுள் துணை இருப்பார் என்று தான் கூறி அனுப்பு கிறேன. எனவே கடவுள் தான் அனைத்தும் செய்கிறார். நான் சொல் வதால் எதுவும் நடந்துவிடுவது இல்லை," என்றார்.

அதைக் கேட்ட கஜபதி கடும் கோபம் கொண்டு "எனக்கா ஆசி களை கொடுக்க மறுக்கிறீர்கள்? நான் அடுத்த வாரமே இந்நாட்டு மன்னரை இந்த ஊருக்கு வரவழைத்து அவரது முன்னிலையில் நீங்களே என்னை ஆசீர்வதிக்கும்படிச் செய்கிறேன்," என்று உறுமினான். சத்தியசீலரும் சிரித்துக் கொண்டே "உன் விருப்பப் படியே செய்!" என்று கூறி அவனை அனுப்பினார்.

அந்நாட்டு மன்னனுக்கு கல்லூரில் உள்ள சத்தியசீலரைப் பற்றித் தெரிய வந்தது. எனவே அவரைக் காண



அவன் கல்லூருக்கு வந்தான். கிராம அதிகாரி மன்னனை வரவேற்று ஒரு கூட்டத்திற்கும் ஏற்பாடு செய்தான். அக்கூட்டத்திற்கு சத்தியசீலரும் வந்தார். அப்பொதுக் கூட்டத்தில் கஜபதி சத்தியசீலரிடம் "நீங்கள் மன்னரையும் என்னையும் ஆசீர்வதி யுங்கள்!" என்று கூறினான்.

சத்தியசீலரும், "அரசே! நான் தங்களுக்கு ஆசிகள் அளிக்கத் தகுதி பெறவில்லை. எல்லாம் கடவுளின் செயல். மன்னருக்குக் கடவுள் கொடுக்கிறார். மன்னனும் அவற்றை மக்களுக்கு ஆசிகளாகக் கொடுக் கிறான். எனவே இப்போது நான் இக்கிராம அதிகாரிக்கு ஆசிகளைக் கொடுக்கலாம். சில சமயங்களில் ஆசிகளே சாபங்களாக ஆகிவிட லாம்," என்றார்.

மன்னனும், ''ஆசிகள் சாபங்கள் ஆகுமா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

சத்தியசீலரும், ''நீங்களே அதைப் பார்க்கப் போகிறீர்கள். இந்தக் கிராம அதிகாரி கஜபதி தன் செயல்களுக்கு இரு மடங்கு பலன்களை அனு பவிக்க வேண்டும் என்று ஆசீர்வதிக் கிறேன்'' என்றார். கஜபதி அதைக் கேட்டு நடுநடுங்கி ''அரசே! எனக்கு இவரது ஆசிகள் வேண்டாம். இதை இவர் திரும்ப எடுத்துக் கொள் ளட்டும்'' என்றான்.

மன்னன் ஆச்சரியப்பட்டு ''கஜ பதி! ஏன் இந்த மகானின் ஆசிகளை வேண்டாம் என்று சொல்கிறாய்? உன் செயல்களுக்கு இரு மடங்கு பலன்கள் கிடைக்கிறதே. நீ செய்வது எல்லாம் நல்ல செயல்கள் தானே? அந்த புண்ணிய காரியங்களுக்கான பலன்கள் உனக்கு இருமடங்காகக் கிடைக்கப் போகிறதே! அதற்காக நீ சந்தோஷப்படத்தானே வேண்டும்,'' என்று கேட்டான்.

கஜபதி அதைக் கேட்டு நடு நடுங்கும் குரலில் ''அரசே! இவரது ஆசிகள் எனக்குக் கிடைக்காமல் இருந்தாலே போதும். நான் எப் போதும் போலவே இருந்துவிட்டுப் போகிறேன்,'' என்று கெஞ்சும் குர லில் வேண்டினான். அதைக் கேட்ட மன்னன் ஆச்சரியப்பட்டு அவனைப் பார்த்தான்.

அப்போது ஊரார் ஒவ்வொரு வராக மன்னனிடம் கஜபதி செய்து வரும் அக்கிரமங்களை விவரமாகக் கூறினார்கள். கஜபதி செய்த மோசடி கள், ஏமாற்று வேலைகள் என்று எல்லாம் வெளியாகின.

மன்னன் உடனே கஜபதியைப் பார்த்து ''ஓகோ! நீ செய்தது எல்லாம் அக்கிரமச் செயல்களா? அவற்றிற்கு இரட்டிப்புப் பலன்கள் கிடைக்கும் என்று இந்த மகான் கூறியது பலிக் குமோ என்றுதானே பயப்படுகிறாய்? இனியும் உனக்கு அரசாங்க வேலை இல்லை,'' என்று கோபத் தோடு கூறி அவனைப் பதவி நீக்கம் செய்து அவன் செய்த குற்றங்களுக் காக சிறை தண்டனை விதித்தான். நேர்மை மிக்க சத்தியசீலரை அவன் அந்த கிராமத் தின் அதிகாரியாக நியமித்தான்.





# மர்மக் குளம்

## 18

*(சித்தசாதகன் காட்டானையும் பூசாரியையும் பிடித்து இழுத்துக் கொண்டு ஹிரண்யபுர மன்னன் கனகாட்சனைக் காணச் சென்றான். அன்ன ரதத்தில் சென்று கொண்டிருந்த ஜெயசீலன் ஓரிடத்தில் ஒரு புலி அரசகுமாரி காஞ்சனமாலையைத் துரத்திக் கொண்டிருப்பதைக் கண்டான். ரதத்தை இறக்கி அவன் அவளைக் காப்பாற்றினான். அப்போது மறைந்திருந்த மர்மக்குள மகேஸ்வரன் ஜெயசீலன் கழுத்தில் விழும்படி சுருக்குக் கயிறைப் போட்டான். அப்போது—)*

தன் கழுத்தில் ஒரு கயிறு விழுந்தது கண்டு ஜெயசீலன் ஆச்சரியப் பட்டான். யார் அதை வீசியது என்று அவன் திரும்பிப் பார்த்தான். அப்போது அவன் நீர் யானை மீதிருந்த மகேஸ்வரனையும் குதிரை மீதிருந்த மகரகேதுவையும் கண்டான்.

ஜெயசீலன் தன் கழுத்தை இறுக்கும் கயிறைப் பிடித்துக் கொண்டு அதைத் தன் வாளால் நறுக்கப் போனான். ஆனால் சட்டென நிறுத்தி மகேஸ்வரனை உற்றுப் பார்த்தான். மகேஸ்வரனோ தான் பிடித்திருந்த கயிறை ஆட்டியவாறே ''நீதான் வீரப்பிரதாப ஜெயசீலனா? உம். ஏன் கயிறை அறுக்கவில்லை?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் ''ஓஹோ! நீதான் மர்மக்குள மகேஸ்வரனா? ஆமாம். என் கழுத்தைச் சுற்றி வீசிய கயிறை நீ ஏன் இழுக்கவில்லை?'' என்று கேட்டான்.



மகேஸ்வரனோ ''நான் ஒரு மன்னன். ஒரு சாதாரண மனிதன் கேட்கும் கேள்விக்கு நான் பதில் கூற மாட்டேன்,'' என்றான் கர்வத்தோடு. இப்படி இருவரும் கோபமாகப் பேசியதைக் கண்டு காஞ்சனமாலா ''மாமா! நீங்கள் அன்ன ரதத்திலிருந்து கீழே விழுந்தும் உயிர் தப்பியது மகிழ்ச்சியை அளிக்கிறது. ஆனால் இந்த ஜெயசீலனுக்கு எந்தக் கெடுதலும் செய்ய வேண்டாம். ஏனென்றால் இவர்தாம் என்னை ஒரு கொடிய புலியிடமிருந்து காப்பாற்றினார்,'' என்றாள்.

மகேஸ்வரனும், ''காஞ்சனா! அதை நானே நேரில் பார்த்தேன். இவனைக் கொல்லமாட்டேன். ஆனால் பிடித்து மர்மக் குளத்திற்குக் கொண்டு போகப் போகிறேன்,'' என்றான். அப்போது காஞ்சனமாலா ஜெயசீலனிடம், ''மாமா சொன்னதைக் கேட்டீர்களா? இனி பயப்படாமல் அவருடன் செல்லுங்கள்!'' என்றாள்.

ஜெயசீலனோ, ''இதோ பார் காஞ்சனா! இவன் என்னைப் பிடித்து கொண்டு போக போகிறானாம்! எப்படி என்னைப் பிடிப்பான் என்று பார்க்கிறேன்,'' என்று கோபமாகக் கூறினான்.

அதைக் கேட்ட மகேஸ்வரன் ''எப்படி என்றா கேட்கிறாய்? இதோ பார்!'' என்று கூறித்தான் பிடித்திருந்த கயிறை பலமாக இழுக்கலானான். ஆனால் காஞ்சனமாலா ஜெயசீலன் அருகே ஓடிப்போய் அவன் கழுத்தில் விழுந்த கயிறை இழுத்து ''நீங்கள் மட்டும் இவரைக் கொன்றால் நானும் இதே கயிற்றால் தூக்குப் போட்டுக் கொண்டுவிடுவேன்,'' என்று கூறினாள்.

காஞ்சனமாலா ஜெயசீலனுக்குப் பரிந்து பேசுவது கண்டு மகேஸ்வரன் ஆச்சரியப்பட்டான். பிறகு அவன் ''ஜெயசீலா! நீ நான் மாட்டிய கயிறை அறுத்துத் தப்ப முயலலாம். ஆனால் இந்த நீர் யானையிடமிருந்து தப்ப முடியாது. இது உன்னை ஒரே மிதியில் மிதித்துக் கொன்றுவிடும்,'' என்று உறுமினான்.

ஜெயசீலனும் ஏளனமாகச் சிரித்தவாறே ''அப்படியா? அதையும்தான் பார்க்கலாமே!'' என்றான். அப்போது மகரகேது குறுக்கிட்டு ''ஜெயசீலா! இவர் சொல்கிறபடி நட. அதில் ஒரு ரகசியம் உள்ளது. மேலும் நீ மர்மக் குளத்திற்குப் போக வேண்டும் என்று

துடித்துக் கொண்டிருந்தாயே. அவ சரப்படாதே!'' என்றான்.

ஜெயசீலனும் யோசிக்கலானான். தான் இளவரசன் காஞ்சனவர்மனை யும் இளவரசி காஞ்சனமாலை யையும் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வருவதாக மன்னன் கன காட்சனிடம் கூறிவிட்டு வந்தது அவன் நினைவிற்கு வந்தது.

ஆனால் இப்போது காஞ்சன மாலை மட்டுமே கிடைத்திருக் கிறாள். காஞ்சனவர்மனைப் பற்றித் தெரியவில்லையே. இந்தக் காஞ்சன மாலா மகேஸ்வரனை மாமா என்று கூறுகிறாளே! இதென்ன உறவு! இவ்வாறு அவன் யோசிக்கலானான். பிறகு அவன் மகேஸ்வரனிடம், ''சரி. நீ பலமிக்கவன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

அதற்கு மகேஸ்வரனும் சிரித்துக் கொண்டே ''இதென்ன திடீர் மன மாற்றம்? மனதிற்குள் ஏதாவது திட்டம் தீட்டுகிறாயா?'' என்று கேட்டான். ஜெயசீலனோ, ''பயப் படாதே. என்னிடம் ஒளிவுமறைவு என்பதே கிடையாது. எதையும் வெளிப்படையாகவே செய்பவன் நான். இதை மகரகேதுவே அறிவான். வேண்டுமானால் அவனையே கேள்!'' என்றான்.

அப்போது மகரகேது மகேஸ்வர னிடம் ''நான் முன்பே இவர் சாமானி யப்பட்டவர் அல்ல என்று கூறி இருக்கிறேனே!'' எனக் கூறினான்.



மகேஸ்வரனும் ''சரி. இவனோடு மர்மக் குளத்திற்குப் போவோம். அங்கே போனதும் உண்மை தெரிந்து விடும். இதற்கு முன் ஜலராட்சஸன் ஒருவனைப் பார்த்தோமே. மற்ற ஜல ராட்சஸர்கள் எங்காவது மறைந்து கொண்டிருக்கிறார்களா? அவர்கள் எப்போது என்ன செய்வார்கள் என்று தெரியவில்லையே!'' என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.

அப்போது காஞ்சனமாலா ஜெய சீலனின் கழுத்தில் விழுந்திருந்த கயிறை எடுத்து எறிந்தவாறே ''இது என் மாமா தங்கள் கழுத்தில் போட்ட சுருக்குக் கயிறு அல்ல என்றும் மலர் மாலை என்றும் எண்ணிக் கொள் ளுங்கள்,'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள்.

இப்படிக் காஞ்சனமாலாவுக் கும் ஜெயசீலனுக்கும் நெருக்கம் ஏற்படுவதைக் கண்ட மகேஸ்வரன்



அதைக் கேட்ட ஜெயசீலன் மகர கேதுவிடம் ''கேது! காஞ்சனமாலா மர்மக்குளத்திற்கு மீண்டும் செல் வதற்கு நான் சம்மதிக்கமாட்டேன். இவளையும் இவளது சகோதரனை யும் கண்டுபிடித்துக் கொண்டு வருவதாகக் கனகாட்ச மன்னரிடம் கூறிவிட்டு வந்திருக்கிறேன். இப் போது இவள் கிடைத்திருக்கிறாள். முதலில் இவளைக் கனகாட்சரிடம் ஒப்படைத்துவிட்டு வரவேண்டும். பிறகு காஞ்சனவர்மனைத் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு செல் கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட மகேஸ்வரனும் காஞ்சனமாலாவும் ஜெயசீலனை முறைத்துப் பார்த்தார்கள். காஞ்சன மாலா ஜெயசீலனிடம், ''நானும் என் அண்ணனும் கடத்திச் செல்லப் பட்டது என்னவோ உண்மைதான். ஆனால் நாங்கள் யாரிடமும் சிறைப் பட்டு இருக்கவில்லை. முடிந்தால் நீயே என் அண்ணனைத் தேடிக் கண்டுபிடி!'' எனப் 'படபட'வென்று கூறிவிட்டு நீர்யானையின் மீது ஏறி உட்கார்ந்துவிட்டாள்.

அப்போது ஜெயசீலன் மகரகேது விடம் ''இந்த மர்மக்குளம், அரச குமாரன், அரசகுமாரி ஆகியோர் கடத்தப்பட்டது என்பதெல்லாம் பொய்யா?'' என்று வியப்படைந்து கேட்டான். மகரகேதுவும் ''முதலில் இங்கே வா. என் குதிரையில் ஏறிக்கொள். பிறகு எல்லாவற்றையும் விவரமாகக் கூறுகிறேன்,'' என்றான்.

ஜெயசீலனும் அவன் கூறியபடி

ஆச்சரியப்பட்டு ''இது என்ன கூத்து இப்படி ஒரு திருப்பமா! சரி இருக் கட்டும். இந்த ஜெயசீலனின் உதவி யோடு என் எதிரிகளான ஜலராட் சஸர்களை ஒழித்து விடுகிறேன்,'' என எணணிக் கொண்டான்.

அப்போது மகரகேது, ''பிரபுவே! இனி தங்கள் கட்டளை என்ன?'' என்று கேட்கவே, மகேஸ்வரனும் ''எல்லோருமே மர்மக் குளத்திற்குச் செல்வோம். நீ முன்னாலே போ. நாங் கள் உன்னைப் பின்தொடர்கிறோம்,'' என்றான்.

மகரகேதுவும், ''ஜெயசீலனை நடத்தியா கொண்டு செல்வது?'' என்று கேட்டான். மகேஸ்வரனும் ''காஞ்சனமாலா நீர்யானை மீது அமர்ந்து கொண்டு என்னுடன் வரு வாள். நீ ஜெயசீலனை உன் குதிரை யின் மீது ஏற்றிக்கொண்டு செல்!'' என்றான்.

நடக்கவே, மகரகேது தன் குதிரையை ஓட்டினான். அவன் பின்னால் மகேஸ்வரனும் காஞ்சனமாலாவும் அமர்ந்திருந்த நீர் யானை சென்றது. அப்போது ஜெயசீலனுக்கு சித்த சாதகனைப் பற்றிய நினைவு வந்தது. அவன் இப்போது எங்கே இருக் கிறானோ, என்ன செய்கிறானோ என்று யோசிக்கத் தொடங்கினான்.

இச்சமயத்தில் குதிரை வீரர்கள் படைத்தலைவன் வீரசிம்மன் சித்த சாதகனை கனகாட்ச மன்னனின் முன் கொண்டுபோய் நிறுத்தினான். மன்னன் அவனிடம் பரிவுடன் பேசி ''ஜெயசீலன் என் மகனையும் மக ளையும் தேடிக் கண்டுபிடிப்பதாகக் கூறி உன்னைக் கூட்டிக் கொண்டு தானே சென்றான்? இதுநாள் வரை நீயும் அவ்விருவரும் வராததால் நானே என் மகளையும் மகனையும் தேடிக் கண்டுபிடிப்பது எனத் தீர் மானித்தேன். அதனால் ஆட்சியை அமைச்சர்களிடம் ஒப்படைத்து விட்டு இந்த முயற்சியில் இறங்கி விட்டேன்,'' என்றான்.

சித்தசாதகனும் ''அரசே! அரச குமாரனையும் அரசகுமாரியையும் கடத்திச் சென்றவர்கள் மர்மக் குளத் தில் வாழும் விசித்திர மனிதர்கள். அவர்களால் நீரிலும் நிலத்திலும் நம்மைப் போல வசிக்க முடியும். அவர்களில் சிலரைக் கூடப் பிடித் தோம். அவர்களது மன்னனே முத லில் மனித மாமிசம் உண்ணும் காடர் களிடம் சிக்கினான். பிறகு என்னிடம் அகப்பட்டுக் கொண்டான். ஆனால்



எப்படியோ தப்பி ஓடிவிட்டான். அதே மர்மக் குளத்தின் வேறொரு பகுதியில் ஜலராட்சஸர்கள் இருக் கிறார்கள். அவர்களில் ஒருவன் இப் போது என் அடிமையாக இருக்கிறான் அவனைக் கொண்டு நாம் மர்மக் குளத்தை அடைந்துவிடலாம்,'' என்றான்.

அப்போதுதான் கல்கதையைத் தன் தோளின் மீது வைத்துக் கொண்டு சித்தசாதகனின் பின்னால் நின்ற ஜல ராட்சஸனை கனகாட்சன் கவனித் தான். அப்போது மன்னன் ''சரி, ஜெய சீலன் எங்கே?'' என்று கேட்கவே, சித்தசாதகனும் ''அவன் அன்னப் பட்சி ரதத்தில் அமர்ந்து அரசகுமார னையும் அரசகுமாரியையும் தேடிக் கொண்டிருக்கிறான்,'' என்றான்.

அதைக் கேட்ட மன்னனும் மற்ற வர்களும் அன்னப்பறவை ரதமா என்று கூவி ஆச்சரியப்பட்டார்கள்.

''அன்னப் பறவை ரதம், ஜல ராட்சஸன், மனிதக் குரங்கு, மனித மாமிசம் உண்ணும் காடர்கள், மரண மரம் என்றெல்லாம் இக்காட்டில் இருப்பதைக் கண்டால் நீங்கள் இன்னமும் ஆச்சரியப்படுவீர்கள்,'' என்றான் சித்தசாதகன்.

அப்போது ஒரு மரக்கிளை ஆடி 'சரசர'வென்ற ஒலியை உண்டாக்கவே சித்தசாதகன் அங்கு பார்த்தான். இரு காடர்கள் ஓடி வந்து ''ஐயா! எம் தலைவர் காட்டானையும் பூசாரியையும் நீங்கள் விடுதலை செய்தால் உங்களிடம் ஒரு ரகசியத்தை சொல்வோம்,'' என்றார்கள்.

அதைக் கேட்ட சித்தசாதகன் பலமாகச் சிரித்தவாறே ''நீங்கள் எனக்கு ஒரு ரகசியத்தைச் சொல்லப் போகிறீர்கள். கேட்க வேடிக்கையாக இருக்கிறது. சரி, நான் அவர்களை அழைத்துவரச் சொல்கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகனும் ''என்னைப் போல மனிதர்களா? ஓர் ஆணும் ஒரு பெண்ணுமா? அவர்கள் போகும் வழியைக் காட்டவோ அல்லது சொல்லவோ முடியுமா?'' என்று படபடவென்று கேட்டான்.

சித்தசாதகன் ஜலராட்சஸனை அனுப்பி அவர்களைக் கொண்டுவரச் சொன்னான். ஜலராட்சஸனும் அவர்கள் இருவரையும் தூக்கி வந்து சித்தசாதகனின் முன் நிறுத்தினான். சித்தசாதகன் காடர்களிடம் ''முதலில் ரகசியத்தைச் சொல்லுங்கள்,'' என்றான்.

அவர்களும், ''சற்றுமுன் உங்களைப் போல் ஒரு மனிதனையும், பெண் ஒருத்தியையும் கண்டோம். அந்த மனிதன் முதலைத் தலையனுடன் ஒரு குதிரையில் போய்க் கொண்டிருந்தான். அப்பெண்ணோ நீர்யானை மீது ஒரு விசித்திர மனிதனுடன் அமர்ந்து போய்க் கொண்டிருந்தாள். இதற்குள் அன்னப் பறவை ரதத்திலிருந்து சிலர் குதித்து கத்திக்கொண்டு வரவே, நாங்கள் அவர்களிடம் அகப்படக் கூடாது என்று இங்கே ஓடி வந்துவிட்டோம்,'' என்றார்கள். *(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# இயற்கையின் இயல்பு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைச் சுமந்துகொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அத னுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் உன் சுக போகங்களை விட்டுவிட்டு ஏன் இப்படி சிரமப்படு கிறாய்? நீ வைத்தீஸ்வரனின் நிலையில் இல்லையே. அவன் இரு துறைகளில் வல்லவன். ஆயினும் எதில் தொடர்ந்து இருப்பது எனத் திகைத்தான். இப்போது அவனது கதையைக்



கூறுகிறேன. கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை கூற ஆரம்பித்தது.

சுவேதபுர மன்னன் சுசேனவர்மன் இயற்கையை பேணிக் காப்பவன். கலாரசிகன். தாராள மனம் கொண்டவன். மரம் செடிகொடிகளையோ, மிருகங்களையோ அல்லது பறவைகளையோ அழிக்கக் கூடாது என்று யாவரிடமும் கூறி வந்தான்.

அவன் ஒவ்வொரு ஆண்டிலும் சங்கிராந்திப் பண்டிகையின்போது பலபோட்டிகளை நடத்தி வந்ததோடு இயற்கைக் காட்சிகளை மிக அழகாகச் சித்தரித்துக் காட்டும் ஓவியர்களுக்கு நிறையப் பரிசுகளை அளித்தும் வந்தான்.

தலைநகருக்குச் சற்றுத் தொலைவிலுள்ள ஒரு கிராமத்தில் வைத்தீஸ்வரன் என்ற ஆயுர்வேத வைத்தியன் இருந்தான். அவன் ஓவியங்கள் வரைவதிலும் திறன் பெற்றவன். யாராவது தன் உருவப் படத்தை வரைந்து கொடுக்கச் சொன்னால் போதும். அவன் அப்படியே தத்ரூபமாக வரைந்து கொடுப்பான். அதனால் பல பணக்காரர்கள் தம் உருவங்களை வரைந்து கொடுக்கும்படிக் கேட்டு வாங்கிக் கொண்டு போனார்கள்.

ஒருமுறை மன்னன் சங்கராந்தியின்போது நடத்தும் ஓவியப் போட்டியில் கலந்து கொள்ள அவன் தீர்மானித்துக்கொண்டான். அதற்காக இயற்கைக் காட்சியைப் பின்னணியாகக் கொண்டும் இரு மயில்கள் எதிரெதிராக நின்று கொண்டு தோகை விரித்து ஆடுவது போல ஒரு படம் வரைந்து வண்ணங்களையும் தீட்டினான்.

அந்தச் சித்திரத்தைப் பார்த்தவர்கள் எல்லோருமே ''ஆகா! பிரமாதம்!! இந்த ஆண்டு ஓவியப் போட்டியில் இதற்குத்தான் முதல் பரிசு கிடைக்கும்,'' என்றார்கள். வைத்தீஸ்வரனும் அந்தச் சித்திரத்தை எடுத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றான்.

போட்டிக்குத் தேர்ந்து ஏடுக்கப்பட்ட ஓவியங்களில் வைத்தீஸ்வரனின் ஓவியமும் ஒன்று. அந்த ஓவியத்தைப் பார்த்த அரசாங்க பண்டிதரும் அமைச்சர்களும் மன்னனிடம், ''அரசே! இந்த ஆண்டு வரையப்பட்ட ஓவியங்களில் இதற்குத் தான் முதல் பரிசு கொடுக்க வேண்டும். இதை வரைந்த ஓவியனை நாம்

கௌரவிக்க வேண்டும்,'' என்றார்கள். மன்னனும் அதைப் பார்த்துவிட்டு ''ஆமாம். நீங்கள் எல்லோரும் கூறுவதுபோல இது முதல் பரிசைப் பெறத் தகுதி பெற்றதே. மயில்கள் இரண்டும் எதிர்எதிராக நின்று தோகை விரித்து ஆடுவது எவ்வளவு அழகாக வரையப்பட்டிருக்கிறது!'' என்று புகழ்ந்தார்.

அப்போது ஒரு படைத் தலைவனின் பக்கம் நின்றிருந்த ஒரு மலைவாசி பலமாகச் சிரித்தான். அதைக் கேட்டு, மன்னனும் வைத்தீஸ்வரனும் தர்பாரில் இருந்த மற்றவர்களும் கோபத்தோடு அவனைப் பார்த்தார்கள்.

அதைக் கண்ட மலைவாசி தான் ஏதோ ஒரு பெரிய குற்றம் புரிந்துவிட்டதாக எண்ணி பயந்தான். ஆனால் மன்னனோ அந்த மலைவாசியைப் பார்த்து, ''பயப்படாதே, வா இங்கே!'' என்று பரிவுடன் அழைத்தான். அவனும் மன்னனருகே போய் நின்றான். அப்போது மன்னன், ''உனக்கு இந்த ஓவியம் பிடிக்கவில்லையா? அதனால்தான் சிரித்தாயா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட மலைவாசி தயங்கியபடி நிற்கவே மன்னனும் ''பயப்படாதே. நீ ஏன் சிரித்தாய் என்று நாங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். நீ காட்டில் வாழ்பவன். அதனால் மயில்களைப் பற்றி நன்கு அறிந்தே இருப்பாய். தோகை விரித்து ஆடும் இந்த இரண்டு மயில்களின் சித்திரம் அழகாகத்தானே



இருக்கிறது?'' என்று கேட்டான்.

வைத்தீஸ்வரனும் மலைவாசி என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்க ஆவலாக இருந்தான். அப்போது மலைவாசி மன்னனையும் வைத்தீஸ்வரனையும் பார்த்து ''இதை வரைந்த ஓவியர் பெரும்தவறைச் செய்திருக்கிறார்,'' என்றான்.

மன்னனோ, ''அப்படியா! இதில் எவ்விதத் தவறும் இருப்பதாக எங்கள் எல்லோருக்கும் தெரியவில்லையே. அப்படி என்ன தவறை நீ இதில் கண்டுவிட்டாய்?'' என்று கேட்டான். மலைவாசியும் ''ஐயா! ஆண் மயில்தான் தோகை விரித்து ஆடும். அதுவும் ஒரு பெண் மயிலைக் கவரவே. எனவே ஒரு ஆண் மயில் மற்றொரு ஆண் மயிலின் முன் நின்று தோகை விரித்து ஆடாது. எனவே ஒரு

ஆண் மயில் தோகை விரித்து நிற்கும் போது இன்னொரு ஆண் மயில் அதன் முன்நின்று தோகை விரித்து நிற்பது போல வரைந்திருப்பது தவறே!'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் திகைத்துப் போனான். வைத்தீஸ்வரனோ அந்த மலைவாசியை மரியாதையுடன் பார்த்து வணங்கிவிட்டு தான் வரைந்த ஓவியத்தை எடுத்துக் கொண்டு மன்னனுக்கும் மற்றவர்களுக்கும் வணக்கம் செலுத்திவிட்டு அங்கிருந்து சென்றுவிட்டான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! வைத்தீஸ்வரனின் ஓவியத்தை மன்னனும் மற்றவர்களும் பாராட்டி அதற்கே முதல் பரிசு என்று கூட நினைத்தார்கள். இந்நிலையில் ஓவியக்கலை பற்றி ஏதும் அறியாத ஒரு மலைவாசி அதில் தவறு இருந்ததாகக் கூறியது சரியா? அதைக் கேட்டு கோபப்படாமல் வைத்தீஸ்வரன் போட்டியிலிருந்து விலகி சபையோரை வணங்கிவிட்டு சென்றது பண்பான செயலா? இந்த வினாக்களுக்குச் சரியான பதில்கள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்,'' என்றது.

விக்கரமனும், ''மலைவாசி இயற்கையின் இடையில் வாழ்பவன். பறவைகள், மிருகங்கள் ஆகியவற்றின் செயல்கள் பற்றி நன்கு அறிந்தவன். எனவேதான் இரு ஆண் மயில்கள் நேருக்கு நேராக நின்று தோகை விரித்துக் கொண்டிருப்பது போல சித்திரம் இருப்பது உண்மைக்குப் புறம்பானது என்பதை அவன் எடுத்துக் கூறினான். இயற்கையின் இயல்பு எது எனக் கண்டே ஓவியம் வரையப்படவேண்டும். அதில் தான் தவறிவிட்டதை உணர்ந்தே மலைவாசியை மரியாதையுடன் வணங்கி போட்டியிலிருந்து விலகி யாவரிடமும் விடைபெற்றுக் கொண்டு சென்றான்,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் வேதாளம் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.





# ராசியான நகை!

ராயபுரத்து ஜமீன்தாரர் குடும்பம் என்றாலே அந்த வட்டாரத்தில் மதிப்பு மிக அதிகம். ஜமீன்தாரர் பூபதியார் இறந்துவிட்டபோதிலும் அவரது மனைவி சவிதாதேவி தன் மகன்களையும், மகள்களையும் அரவணைத்துக் கொண்டு அனைவரையும் ஒரே குடும்பமாக இருக்கச் செய்தாள்.

ஜமீன்தாரரின் கடைசி மகன் கருணாகரன். அவன் மனைவி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அதுவே அக்குடும்பத்தில் முதல் குழந்தையாதலால் குழந்தை மதுவை எல்லோரும் தூக்கிக் கொஞ்சி குலாவலானார்கள். அக்குழந்தையை அக்கறையுடன் கவனித்துக் கொண்டவள் அவ்வீட்டு வேலைக்காரி வேலாயி.

மதுவுக்கு இரண்டு வயதான போது கருணாகரனின் மனைவி ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அப்போது முதல் அக்குடும்பத்திலுள்ள எல்லோரும் அந்த பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு கொஞ்சிக் குலாவினார்கள். மதுவை யாரும் கவனிக்கவில்லை இதனால் மது ஆத்திரம் கொண்டு கைக்குக் கிடைத்த பொருளை எல்லாம் தூக்கி விட்டெறிந்தான். பிறந்த குழந்தையைக் கிள்ளினான், அடித்தான், உதைத்தான்.

அவனது இந்த துடுக்குத் தனம் நாளுக்குநாள் அதிகரிக்கவே, பிறந்த குழந்தைக்கு எவ்விதத் தீங்கும் நேர்ந்துவிடக் கூடாது என்று எண்ணி சவிதாதேவி மதுவை சற்று தொலைவிலுள்ள ஊரில் வாழும் மதுவின் தாய்மாமன் வீட்டிற்கு வேலாயியுடன் அனுப்பிவிட்டாள்.

அதே நாளில் சவிதாதேவியின் மூத்த மருமகளின் வைர மாலை காணாமல் போய்விட்டது. குளிப்பதற்கு முன் அவள் அதைக் கழற்றி

- கௌரிநாதன் -

தான் வைர மாலையை எடுத்து எங்கேயோ ஒளித்து வைத்திருக்க வேண்டும்,'' என்றாள்.

மூன்றாவது மருமகள் தன் கணவனிடம், ''உங்கள் இரண்டாவது அண்ணனின் மகள் கோமதி இனிக்க இனிக்க பேசினாலும் பெரிய திருடி. பட்சணங்களை யாரும் பார்க்கவில்லை என எண்ணி எடுத்து அவள் தின்பதை நான் பல தடவைகள் பார்த்திருக்கிறேன். அவள்தான் வைர மாலையை எடுத்திருக்க வேண்டும்,'' என்றாள்.

அப்போது மூத்த மருமகள் தன் மாமியாரிடம், ''நீங்கள் வேலாயியை மிகவும் நம்பிவிட்டீர்கள். அவள் மதுவிடம் மிகவும் பிரியமாக இருப்பதுபோல நடித்து இப்போது தான் சரியான சந்தர்ப்பம் என்று எண்ணி வைரமாலையைத் திருடிக் கொண்டு பட்டணத்திற்குப் போய் விட்டாள். அங்கே அதை விற்றுப் பணமாக்கிக் கொண்டுவிடுவாள்,'' என்றாள். சவிதாதேவியும், ''இந்தக் காலத்தில் யாரையுமே நம்ப முடியவில்லை,'' என்று மட்டும் கூறிவிட்டு பேசாமல் இருந்தாள்.

ஒரு மாதம் கழிந்தும் வைரமாலை பற்றி எவ்விதத் துப்பும் கிடைக்கவில்லை. வேலாயியும் மதுவுடன் திரும்பி வந்தாள். அப்போது சவிதாவின் மூத்த மகன் வேலாயியின் கணவனிடம், ''நீயும் வேலாயியும் இந்த வீட்டில் பல வருடங்களாக வேலை செய்து வருகிறீர்கள். இது வரை இந்த வீட்டிலிருந்து ஒரு



பூஜை அறையில் வைத்தாளாம். குளித்துவிட்டு அவள் வந்து பார்த்த போது அந்த வைர மாலை அவள் வைத்த இடத்தில் இருக்கவில்லை.

அவள் சற்று நேரம்வரை அங்கும் இங்குமாய்த் தேடிவிட்டு தன் மாமியாரிடம் அதைத் தெரிவித்தாள். சவிதாதேவியும், ''வைர மாலை காணாமல் போயிற்றா? அது நம் குடும்பத்திற்கு ராசியான நகை ஆயிற்றே! அதை யார் எடுத்திருப்பார்கள்?'' என்று யோசிக்கலானாள். இந்தக் கேள்வி எல்லோர் மனதிலும் என்று எழுந்தது.

அப்போது இரண்டாவது மருமகள் தன் கணவனிடம், ''உங்கள் அண்ணனின் மகன் பட்டணத்திலிருந்து வந்திருக்கிறானே! அவன் நடத்தை சரியில்லை என்பதுதான் எல்லோருக்கும் தெரியுமே. அவன்

பொருளும் காணாமல் போனதில்லை. உன் மனைவி மதுவுடன் பட்டணத்திற்குப் போன அன்றுதான் வைரமாலை காணாமல் போயிருக்கிறது. இதனால் உன் மனைவிதான் அதை எடுத்துக் கொண்டு போயிருப்பாளோ என்ற சந்தேகம் ஏற்பட்டுள்ளது. இதுபற்றி நீ மெதுவாக அவளிடம் விசாரித்துப் பார்!'' என்றான்.

வேலாயியின் கணவனும் அன்று இரவே தன் மனைவியைக் கண்டு, ''வேலாயி! இதுவரை நாம் இந்த வீட்டின் ஒரு துரும்புக்குக் கூட ஆசைப்பட்டதில்லை. இப்போது இந்த வீட்டிற்கே ராசியான வைரமாலை காணாமல் போய்விட்டது. நீ மதுவை அழைத்துக் கொண்டு போன அன்றுதான் அந்த மாலை காணாமல் போயிருக்கிறது. அதனால் உன் மீது சந்தேகம் ஏற்படுவது இயல்பே. அதனால் நீ எஜமானி அம்மாளைக் கண்டு நீ குற்றமற்றவள் என்பதைக் கூறு,'' என்று சொன்னான்.

வேலாயி உடனே போய் சவிதாதேவியைக் கண்டு ''அம்மா! இவ்வளவு காலமாக என்னைப் புரிந்து கொண்ட நீங்களுமா நான் வைரமாலையைத் திருடி எடுத்துக் கொண்டு போய்விட்டதாக சந்தேகப்படுகிறீர்கள்?'' என்று கண்ணீர் உகுத்தவாறே கேட்டாள்.

சவிதாதேவியும் ''அப்படி எல்லாம் ஒன்றும் இல்லை,'' என்று கூறி அவளைச் சமாதானப்படுத்தி அனுப்பினாள். ஆனால் ராசியான நகை எப்படியோ போய்விட்டதே என்ற வருத்தம் மட்டும் அவள் மனதை



விட்டு அகலவில்லை. கோடை கால வெயில் அதிகரிக்கவே கிணற்று நீர் ஊறுவது குறைந்து நின்றும் போயிற்று.

அதைக் கண்டு வேலாயியின் கண வன் சவிதாதேவியிடம் ''அம்மா! கிணற்றில் தூர் வாரினால் ஊற்று ஊறும். இதற்காக ஆட்களை அமர்த்த லாமா?'' என்று கேட்டான். சவிதா தேவியும் அதைச் செய்ய அனுமதி அளித்தாள்.

கிணற்றிலிருந்து தூர் வாருவதை எல்லோரும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். கிணற்றில் இருந்து சேற்றையும் சகதியையும் எடுத்து வேலையாட்கள் வெளியே கொட்டிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது அதில் பந்து, பம்பரம், பொம்மை என்று இருக்கவே மது குதித்து ஓடிவந்து, ''இது என் பம் பரம். இது என் பந்து. இது என் பொம்மை,'' என்று கூறி எடுக்க லானான். அப்போது காணாமல் போன வைர மாலையும் கிடைக் கவே அவன், ''எனக்கு மாமாவின் வீட்டிற்குப் போக விருப்பமில்லை. அதனால் ஆத்திரப்பட்டு இதையும் நான்தான் எடுத்துக் கிணற்றில் போட் டேன்,'' என்று எடுத்துத் தன் பாட்டி சவிதாதேவியிடம் கொடுத்தான்.

சவிதாதேவியும் தன் பேரனைக் கட்டித் தழுவியவாறே, ''அப்பாடா! ரசியான நகை போய்விட்டதே என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந் தேன். அது திரும்பக் கிடைத்ததில் எனக்கு சந்தோஷமே. ஆனால் உன் விஷமத்தனத்தால் யார் யாரையோ இது காணமால் போனதற்காகச் சந்தேகப்பட வேண்டியதாயிற்று. இனிமேல் கோபத்தில் ஆத்திரப் பட்டு எதையும் எடுத்து கிணற்றில் போடாதே. ஆத்திரப்படாமல் விஷ மம் செய்வதை விட்டுவிட்டு உன் தங்கைப் பாப்பாவுடன் விளையாடு. அப்போதுதான் எல்லோரும் உன் னுடன் அன்பாகப் பேசி பழகு வார்கள்,'' என்றாள்.

மகன்களும், மருமகன்களும் வேலாயியும் அவள் கணவனும் நடந்தது என்ன என்று அறிந்ததும் எதுவும் பேச முடியாமல் சிலை போல நின்றார்கள்!



இந்தியப் புராதனக் கதைகள் – 16

# அஹிம்சையைக் கடைப்பிடித்தான்!

ஜமீன்தாரர் வீரேந்திர சௌத்ரி ஆண்டுதோறும்ட காளி பூஜையை வெகுவிமரிசையாக நடத்தி வந்தார். மேளதாளங்கள் முழங்க, புரோகிதர்கள் வேத மந்திரங்களை கணீரென்று ஓதி பலவித பண்டங்களைப் படைப்பார்கள். நூற்றுக்கணக்கில் ஆடுகள் பலியிடப்படும். இவற்றை ருசியாக சமைத்து பூஜையைக் காண வந்த ஆயிரக்கணக்கான மக்களுக்கு விநியோகம் செய்யப்படும். அவர்களும் காளிதேவியின் மகாபிரசாதம் எனக் கூறி உண்டு களித்துச் செல்வார்கள்.

இதில் சிலர் ஆடுகள் வெட்டப்படும் கோரமான காட்சியைக் காண சகிக்காமல் கண்களை மூடிக் கொள்வார்கள் அல்லது அந்தச் சமயத்தில் வேறு எங்காவது போய்விடுவார்கள். சிலர் ஆடுகள் துடிதுடித்துச் சாவதைக் கண்டு மகிழ்வதும் உண்டு. இதை ஜமீன்தாரரும் அவரது நண்பர்களும் கூட கண்டு ரசிப்பது வழக்கம். அவர்கள் சமைத்துப் பக்குவப் படுத்திய ஆட்டு மாமிசத்தை விரும்பி உண்பார்கள்.

இதுமாதிரி பல ஆண்டுகள் நடந்து கொண்டே இருந்தது. ஒருமுறை பூஜைக்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்ய சிப்பந்திகள் முனைந்தபோது சௌத்ரி திடீரென ''இந்த ஆண்டு முதல் இனி ஒருபோதும் காளி தேவிக்கு ஆடுகளை பலியிடக்





கூடாது,'' என்று கட்டளை இட்டார். இதைக் கேட்ட அவரது நண்பர்களும் பணியாட்களும் திகைத்துப் போனார்கள். நெடுங்காலமாக இருக்கும் வழக்கத்தை இவர் எப்படித் தடுக்கலாம்? ஆண்டிற்கு ஒருமுறை நன்கு பக்குவப் படுத்தப்பட்ட ருசியான மாமிசத்தைச் சாப்பிடும் வாய்ப்பை இழக்கிறோமே என்று அவர்கள் மனம் குமுறியது. இனிமேல் இது கிடைக்காதே என்று ஆத்திரம் கூட பட்டார்கள்.

அவர்கள் ஜமீன்தாரிணியைக் கண்டு ''அம்மா! நீங்கள் காளி தேவியின் பரம பக்தை. காளி பூஜை ஆண்டுக்கு ஒருமுறை தான் விமரிசையாக நடத்தப்படுகிறது. இதுவரை தேவியை மகிழ்வித்து வந்த ஆடுகளை பலியிடும் வழக்கத்தைக் கைவிட்டுவிடுவதா? காளிதேவி கோபம் கொண்டால் என்ன ஆகுமோ? அதனால் இதனை நிறுத்தாமல் தொடர்ந்து ஆடுகளை தேவிக்கு பலியிட வேண்டும் என்று ஜமீன்தாரரிடம் எடுத்துக் கூறுங்கள்,'' என்று வேண்டினார்கள்.

ஆனால் ஜமீன்தாரிணியோ, ''காளி தேவிக்கு ஆடுகளை பலி இடுவது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அது தெய்வீகச் சூழ்நிலையையே பாழாக்குகிறது,'' எனக் கூறினாள்.

ஆனால் அவர்களோ, ''நீங்கள் சொல்வதும் சரியே. எதற்கும் நீங்கள் இதுபற்றி அவரிடம் ஒருமுறை பேசித்தான் பாருங்களேன்,'' என்று வற்புறுத்தினார்கள். ஜமீன்தாரிணியும் அரைமனதாக ஒப்புக் கொண்டு அவர்களை அனுப்பினாள்.

மறுநாள் காலையில் ஜமீன்தாரிணி தன் கணவர் இருக்கும் அறைக்குச் சென்று ''காளி பூஜையில் ஆடுகள்



உண்மையின் உயர்வை உணர்ந்து தன் புலன்கள் யாவையும் அடக்கிக் கொள்பவனின் சந்தேகங்கள் யாவும் மறைந்துவிடும்.

*- ஸ்ரீமத் பாகவதம்.*

வெட்டப்பட வேண்டும் என்று உங்கள் நண்பர்கள் விரும்புகிறார்கள். அந்த வழக்கத்தை நிறுத்திவிட்டால் தெய்வம் தண்டனை கொடுக்குமோ என்று பயப்படுகிறார்கள். புத்திசாலி களான அவர்கள் சொல்வதை நீங்கள் சற்று யோசித்துப் பார்க்கலாமே!'' என்றாள்.

ஜமீன்தாரரோ, ''அவர்களா புத்தி சாலிகள்? கொஞ்சமும் ஈவு, இரக்கம் இல்லாதவர்கள். நீயும் அவர்களைப் போலத்தானா?'' என்று கண்ணீர் விட்டவாறே கேட்டார்.

ஜமீன்தாரிணி பதறிப் போய் ''ஏன் கலங்குகிறீர்கள்? நான் ஒன்றும் இரக்கமற்றவள் அல்ல,'' என்றாள்.

ஜமீன்தாரரும் ''பல வருடங்களாக நான் மாமிசத்தையும் மீனையும் கடித்து மென்று சுவைத்து வந்தேன். சென்ற ஆண்டு அவ்வாறு செய்ய சிரமப்பட்டேன். ஏனெனில் என் பற்களில் பாதி அப்போது விழுந்து விட்டன. அப்போது நான் மிகவும் சிரமப்பட்டதைக் கண்டு யாரும் இரக்கப்படவில்லை. இப்போதோ என் பற்கள் எல்லாம் விழுந்து விட்டன. இந்தப் பொக்கை வாயைக் கொண்டு மாமிசத்தை எப்படிக் கடித்து மென்று சாப்பிட முடியும்? அதனால் நான் சாப்பிட முடியாத மாமிசத்தை வேறு யாரும் சாப்பிடக் கூடாது என்பதற்காகவே அப்படி கட்டளையிட்டேன்,'' என்றார்.

அதைக் கேட்ட ஜமீன்தாரிணி பலமாகச் சிரித்து ''இதுதான் நீங்கள் அஹிம்சையைக் கடைப்பிடிக்கக் காரணமா?'' என்று கேட்டாள். ஜமீன் தாரர் மௌனமானார்!






## ரூபாய் என எப்படி வந்தது?



இந்திய நாணய முறை ரூபாயின் அடிப்படையானது. ரூபாய் என அதற்கு எப்படிப் பெயர் வந்தது தெரியுமா? பாபரிலிருந்து பகாதூர் ஷா ஜாபர் வரை முகலாய ஆட்சி நம் நாட்டில் சிறிது காலத்திற்கு இருந்தது. இதில் 15 ஆண்டுகள் முகலாய மன்னன் ஹுமாயூனின் ஆட்சி இருக்கவில்லை. இந்த மன்னனை ஷேர்ஷா சூரி தோற்கடித்து விரட்டி விட்டு டில்லி சுல்தான் ஆனான். தன் வெற்றியின் நினைவாக ஒரு நாணயத்தை வெளியிட விரும்பினான். 1542ல் ஒரு வெள்ளி நாணயம் 178 கிராம் எடை என நிறைய தயாரிக்கப்பட்டன. அதில் ஒன்று ஷேர்ஷாவிடம் காட்டப்பட அவன் ''ஆகா, ருபையா'' என மகிழ்ச்சியாகக் கூவினான். ருபையா என்றால் அழகானது எனப் பொருள். அன்றுமுதல் இந்திய நாணய முறை ரூபாயை அடிப்படையாகக் கொண்டதாய் ஆகிவிட்டது.

## ஆடும் கோபுரங்கள்

இத்தாலியில் பிசாவிலுள்ள சாய்ந்த கோபுரக் கட்டடம் இக்கால அதிசயங்களில் ஒன்று. 1454ல் அகமதாபாதில் பீபீ மசூதியை அப்போது குஜராத்தை ஆண்ட அகமது ஷா கட்டினான். இதில் இரு கோபுரங்கள் உள்ளன. இவை அசைபவை. யாராவது ஒருவர் இந்த 'ஜுல்தா மீனார்' மீது சாய்ந்தால் அது ஆடி அசைந்தது. இக்கோபுரங்கள் உறுதியானவை. உயர்ந்து கம்பீரமாக விளங்கியவை. ஆனால் ஒருவர் அதன் மீது சற்று பலமாகச் சாய்ந்தால் ஏன் அசைந்து ஆடியது என்று தான் தெரியவில்லை. 2001ல் ஏற்பட்ட மாபெரும் நிலஅதிர்ச்சியில் இந்தக் கோபுரங்கள் சேத முற்றதால்தான் கடந்த காலத்தில் நடந்ததாக எழுதப்பட்டது. இதை இந்தியத் தொல் பொருள் ஆய்வுத் துறை பழுது பார்த்து சரி செய்யும் என எதிர்பார்க்கப்படுகிறது.





# மனநிம்மதி அதிலே!

பத்மினி அந்த ஊரிலேயே பெரிய பணக்காரி. கப்பல் போன்ற வீடு, பத்து ஏக்கர் நிலம், இருபது கறவை மாடுகள் இவை எல்லாம் அவளது தந்தை அவளுக்கு வைத்துவிட்டுப் போனது. அதனால் அவளே வீட்டின் வரவுசெலவுகளை கவனித்துக் கொண்டாள்.

விவசாயம், பால் வியாபாரம், கொடுக்கல், வாங்கல் என்று பல வற்றை அவளே கவனித்து வந்ததால் அவளுக்கு நிம்மதி என்பதே இல் லாமல் போயிற்று.

இதைக் கண்ட அவனது கணவன் ராமு ஒருநாள் அவளிடம் ''நீ அனா வசியமாக வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு பிரச்சினை களில் சிக்கி மனநிம்மதியை இழந்து கொண்டே போகிறாய். மனதில் நிம்மதி இருந்தாலே சுகம். இதை நீ புரிந்துகொள்!'' என்றான். அதற்கு பத்மினியோ பதில் ஏதும் சொல் லாமல் முகத்தைச் சுளித்துக் கொண்டு உள்ளே போனாள்.

அன்று மதிய உணவு உண்ண ராமுவும் பத்மினியும் உட்கார்ந்தார் கள். அன்று சமையல்காரி லட்சுமி வெள்ளரிக்காய், தயிர்ப் பச்சடியைச் செய்திருந்தாள். அதிலிருந்து ஒரு வெள்ளரித் துண்டத்தை பத்மினி எடுத்து வாயில் போட்டாள். ஒரே கசப்பு. உடனே அவள் ''லட்சுமி, இங்கே வா! இதென்ன பச்சடி? ஒரே கசப்பு. பார்த்துச் செய்ய வேண் டாம்?'' என்று கத்தினாள்.

அப்போது அவள் கணவன், ''ஏன் கத்துகிறாய்? கொஞ்சம் அமைதியாக இரு. பச்சடி கசக்கிறது என்றால் அதை ஒதுக்கிவிட்டு உனக்குப் பிடித்தமான உருளைக்கிழங்கு காரக் கறி இருக் கிறதே. அதைச் சாப்பிடு,'' என்று கூறி சமாதானப்படுத்த முயன்றான். ஆனால் அவள் ஆத்திரப்பட்டு எது வுமே சாப்பிடாமல் எழுந்து தன்

- சிவனார் செல்வன் -



அறைக்குப் போய்விட்டாள்.

சற்று நேரத்திற்குப் பின் ராமு பத்மினியின் அறைக்குப் போய் அவளிடம் ''நீ அநாவசியமாக எதற்கு எடுத்தாலும் கோபித்துக் கொள்கிறாய். இதனால் உனக்கு மன நிம்மதியே கிடையாது. அதை நீ அடைய வேண்டும். அடுத்த ஊரில் நூறு வயதிற்கும் மேற்பட்ட சித்த நாதர் என்ற பெரியவர் இருக்கிறார். அவர் பல நோய்களைப் போக்குகிறாராம். மனம் நிம்மதியுடன் இருக்க வழி சொல்கிறாராம். நாம் நாளைக்கு அவ்வூருக்குப்போய் அவரைப் பார்த்துவிட்டு வருவோம்,'' என்றான். பத்மினியும் அதற்குச் சம்மதித்தாள்.

மறுநாள் ராமுவும் பத்மினியும் குதிரை வண்டியில் அமர்ந்து அடுத்த ஊருக்குக் கிளம்பினார்கள். அவர்கள் சித்தநாதரின் வீட்டை அடைந்ததும் பத்மினி அவரை தரிசிக்க அவரது அறைக்குள் சென்றாள்.

அவரை வணங்கி அவள் ''என் பெயர் பத்மினி. நான் அடுத்த ஊர்க்காரி. மிகப் பெரிய பணக்காரி. எனக்கு நிறைய நிலபுலன்களும் அரண்மனை போன்ற வீடும் உள்ளன. ஆனால் என் வேலைக்காரர்கள் நிம்மதியாகத் தம் வாழ்க்கையை நடத்தி வருவது போல நானும் மனநிம்மதியுடன் இருக்க முடியவில்லை. அது ஏன்?'' எனக் கேட்டாள்.

சித்தநாதர் கண்களை மூடியவாறே அவள் சொல்வதைக் கேட்டார். பிறகு கண்களைத் திறந்து புன்னகை புரிந்து ''உன் அக்கம்பக்கத்தில் உள்ளவர்களில் எப்போதும் மன நிம்மதியுடன் இருக்கும் யாராவது ஒருவரை அழைத்து வா. அப்போது உனக்கு ஒரு வழி சொல்கிறேன்,'' என்றார்.

பத்மினியும் ராமுவும் அவரை வணங்கிவிட்டுத் தம் ஊருக்குக் கிளம்பினார்கள். வழியில் இரு பெண்கள் கைகளில் தட்டுகளை எடுத்துக் கொண்டு சிரித்துப் பேசியவாறே சென்று கொண்டிருந்தார்கள்.

அவர்களைக் கண்ட பத்மினி வண்டியை நிறுத்தி ''நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள்? எப்போதுமே நீங்கள் இதுபோலச் சந்தோஷமாக இருக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

அதற்கு ஒருத்தி ''இல்லை. இன்று நாங்கள் கொண்டு வந்த காய்கறிகள்

எல்லாம் சீக்கிரத்தில் விற்றுப் போயின. அதனால்தான் சந்தோஷம். ஆனால் மழை பெய்தால் இந்தக் காய் கறி வியாபாரம் நன்றாக நடக்காதே. அப்போது வருத்தம் தான் படு வோம்,'' என்றாள். அதைக் கேட்ட பத்மினி உற்சாகம் இழந்தவளாய் பயணத்தைத் தொடர்ந்தாள்.

அப்போது வண்டி ஒரு தெரு வழியே போனபோது சிலர் ''அம்மா, பார்வதி!'' என்று கூறிப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

பத்மினி வண்டியை நிறுத்தி அங்கு நின்ற ஒருவரிடம் ''யார் இந்தப் பார்வதி அம்மாள்?'' என்று கேட்டாள். அவரும் ''அவர் சக்தி வாய்ந்த சன்னியாசினி. அதோ தெரி யும் மாந்தோப்பில் பர்ண சாலையில் இருக்கிறார். எப்போதும் சிரித்த முக மாய் புராணக் கதைகளை யாவருக் கும் சொல்லி வருகிறார்,'' என்றார். பத்மினி வண்டியிலிருந்து இறங்கி தன் கணவனை அழைத்துக் கொண்டு சன்னியாசினியைத் தரிசிக்க அந்தப் பர்ணசாலைக்குச் சென்றாள்.

அவள் அந்த அம்மையாரை நமஸ் கரித்து ''அம்மையே! நீங்கள் எப் போதுமே சந்தோஷமாக இருப்பதாக எல்லோரும் கூறுகிறார்கள். உங் களுக்கு துயரமே இல்லையா?'' என்று கேட்டாள்.

சன்னியாசினியும் ''அப்படிச் சொல்ல முடியாது. நான் சன்னியாசம் மேற்கொண்டதும் பல யோக வித்தை களைக் கற்றேன். இன்னும் நான் ஐந்து ஆண்டுகளில் இறக்கப் போகிறேன்.



அதை நினைத்துத்தான் வருத்தப் பட்டுக் கொண்டிருக்கிறேன்,'' என் றாள். அதுகேட்டு அவர்கள் அவளை வணங்கிவிட்டுத் தம் ஊருக்குக் கிளம்பினார்கள்.

வழியில் அவர்கள் ஒரு பூக்காரி யைப் பார்த்தார்கள். அவள் பாடிக் கொண்டே மாலை கட்டிக் கொண் டிருந்தாள். அவளிடம் பத்மினி பூ வாங்கிக் கொண்டு ''பூ விற்றாலும் இதில் நிறைய வருமானம் கிடைக் காதே. ஆனால் நீ பாடிக் கொண் டிருப்பதைப் பார்த்தால் எப்போதும் சந்தோஷமாக இருப்பதுபோலத் தெரிகிறதே. என்ன நான் சொல்வது சரிதானே?'' என்று கேட்டாள்.

அவளும் ''ஆமாம். நான் சந் தோஷமாகவே இருக்கிறேன்,'' என்று கூற, பத்மினியும் ''நான் உன்னிடமுள்ள பூ எல்லாம் வாங்கிக்

கொள்கிறேன். நீ இப்போதே எங்களுடன் சித்தநாதரைக் காண வர வேண்டும்,'' என்றாள். பூக்காரியும் அதற்கு ''ஆகா! வருகிறேன்,'' என்று கூறி மகிழ்ச்சியுடன் அவர்களோடு சென்றாள்.

மூவரும் சித்தநாதரின் வீட்டை அடைந்தார்கள். பத்மினி தான் அழைத்து வந்த பூக்காரியைப் பற்றி அவரிடம் கூறினாள். அவரும் அவளிடம் ''நீ எப்போதுமே சந்தோஷமாக இருக்கிறாயா? இந்த சின்ன வியாபாரத்தைச் செய்தா நீ சந்தோஷமாக இருக்கிறாய்?'' என்றுகேட்டார்.

அவளும் ''நான் செய்யும் வியாபாரம் சின்னதே. அதனால் லாபமும் மிகவும் கொஞ்சமே. அதனால் என்ன? எனக்கு ஒரு ஏக்கர் நிலமும் வசிக்க ஒரு சிறு வீடும் உள்ளன. என் கணவர் விவசாயம் செய்து சம்பாதிக்கிறார். நானும் பூ விற்கிறேன். நாங்கள் கட்டும்செட்டுமாக இருந்து குடும்பம் நடத்தி வருகிறோம். எங்களுக்கு அது வேண்டும், இது வேண்டும் என்ற ஆசையும் இல்லை. இருப்பதைக் கொண்டு திருப்தியுடன் சந்தோஷமாக எப்போதும் இருக்கிறோம்,'' என்றாள்.

அப்போது சித்தநாதர் பத்மினியிடம் ''இந்தப் பெண்ணிடம் பணம் இல்லை. நகை இல்லை. உன்னிடமோ இவை ஏராளமாக உள்ளன. ஆனால் உனக்கு சந்தோஷமோ நிம்மதியோ இல்லை. இவளோ திருப்தியாய் சந்தோஷத்துடன் இருக்கிறாள். இதற்குக் காரணம் நீ யாரையும் நம்பாமல் எல்லா வேலைகளையும் நீயே செய்கிறாய். மேலும் மேலும் சம்பாதிக்கவே ஆசைப்படுகிறாய். திருப்தி இல்லை. சொற்ப வருமானம் ஆனாலும் அதில் திருப்தி அடைந்தாலே மனம் நிம்மதியாக இருக்கும். இதற்கு இந்தப் பூக்காரியே உதாரணம். எனவே இருப்பதைக் கொண்டு திருப்தி அடைந்து உன் கணவரோடு சந்தோஷமாகக் குடித்தனம் செய். அப்போது உனக்கு மன நிம்மதி ஏற்படும்,'' என்றார்.

பத்மினி அவரது அறிவுரையை ஏற்றுத் தன் கணவனுடன் ஊருக்கு வந்தாள். அதன்படி நடந்து சந்தோஷமாக வாழ்ந்து வரலானாள்.



# 'டிங்' 'டாங்' மணியோசை




மும்பையில் வினோத்குமார் திவாரி 'கண்டா வாலா பான் மந்திர்' என்ற ஒரு பீடாக் கடையை நடத்தி வருகிறார். கண்டாவாலா என்றால் மணி உடையவன் என்பது பொருள். இவரிடம் ஒரு மணி அல்ல, 18 நாடுகளிலிருந்து சேகரிக்கப்பட்ட 393 மணிகள் உள்ளன. அவை யாவும் இவரது கடையில் வைக்கப்பட்டுள்ளன. இவர் தம் கடையில் யாராவது பீடா வாங்கினால் அதைத் தயாரித்துக் கொடுத்து காசு வாங்கிக் கொண்டு தம் கடையிலுள்ள ஏதாவது ஒரு மணியை அடிப்பாராம். இந்தப் பழக்கத்தை இவரது தாத்தா 1933ல் பீடாக் கடையை புனேயில் ஆரம்பித்த போது மேற்கொண்டார். முதலாவது மணி ஓசை பணம் பெற்றுக் கொண்டதற்கும் இரண்டாவது மணியோசை பீடா வாங்கியவருக்கு விடை கொடுத்து அனுப்புவதற்குமாம். இவரிடம் பிரான்ஸில் கிடைத்த கண்ணாடி மணியும் திபெத்தில் கிடைத்த மர மணியும் நம் நாட்டிலேயே கிடைத்த 20 கிலோ எடையுள்ள தாமிர மணியும் உள்ளன. இப்படி இவர் பல மணிகளைச் சேர்த்ததால் இவரது பெயர் 'கின்னஸ் புக்'கில் இடம் பெற்றுள்ளது.

# சிறுவனுக்கு 'கருப்பு பெல்ட்'

புனேயின் பிரான்டோன் பால் ஃபெர்னாண்டஸ் என்ற 12 வயது சிறுவனுக்கு தென்கொரியாவில் சியோலில் உள்ள தெய்க்வோண்டோ அகாடமி 4வது பூம் கருப்பு பெல்ட்டை அண்மையில் தெய்க்வோண்டாவில் வழங்கியது. பல நாடுகளிலிருந்து வந்த 400 சிறுவர்களில் இந்தியா விலிருந்து இதில் கலந்து கொண்ட ஒரே இந்தியச் சிறுவன் என்பது குறிப்பிடத் தக்கது. இப்போட்டி சியோலில் நவம்பர் 5லிருந்து டிசம்பர் 2 வரை சென்ற ஆண்டு நடந்தபோது அங்கு கடுமை யான குளிர். அது புனேயிலிருந்து சென்ற இச்சிறுவனுக்கு புதிய அனுபவம் இந்தப் போட்டியின் முடிவு இந்த ஆண்டு ஏப்ரலில் தான் அறிவிக்கப் பட்டது. பெர்னாண்டஸ் தனது முதல் வயதிலிருந்தே பயிற்சி பெற்று வந்தானாம்!



## ஒரிஸ்ஸா மாநில நாட்டுப்புறக் கதை

*முன்காலத்தில் தற்கால ஒரிஸ்ஸா மாநிலம் கலிங்கம் என்றும் உத்கல் என்றும் அழைக்கப்பட்டது. கலிங்க மன்னர்கள் புகழ் பெற்றவர்கள். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இப்பகுதி மக்கள் மலேயாவுடனும் இந்தோனேசியத் தீவுகளான சுமித்திரா, ஜாவாவுடன் கடல் கடந்து வியாபாரம் செய்து வந்தார்கள். அங்குபோய் தம் ஆட்சியையும் கூட அவர்கள் நிலை நாட்டினார்கள். சுமத்திராவை ஆண்ட சைலேந்திரர்கள் ஒரிஸ்ஸாவிலிருந்து சென்றவர்கள் தான்.*

*ஆங்கிலேயரின் ஆட்சி காலத்தில் ஒரிஸ்ஸா பீகார் மாநிலத்துடன் சேர்க்கப்பட்டிருந்தது. 1936ல் அது தனி மாநிலமாக ஆக்கப்பட்டது. தற்போது இதன் மக்கள்தொகை நான்கு கோடி. இதன் பரப்பளவு 155707 ச.கி.மீ. இதன் வடக்கே பீகாரும், வடகிழக்கில் மேற்கு வங்காளமும் தென்கிழக்கில் ஆந்திரப் பிரதேசமும் மேற்கே மகாராஷ்டிர மாநிலமும் கிழக்கே வங்கக் கடலும் உள்ளன.*

*புவனேஸ்வர் இதன் தலைநகர். இங்கு பழங்காலத்து ஆலயங்கள் கம்பீரமாக இருப்பதை இன்றும் காணலாம்.*

# மாமன்னனும் சிறு அணிலும்

கலிங்கத்தை ஆண்ட மன்னன் ஒருவன் இளம் வயதினன். அவன் தன்னை எல்லோரும் புகழ்ந்து கொண்டே இருக்க வேண்டும் என விரும்புபவன். ஒருநாள் தர்பாரில் ஒரு கவிஞர் அவனை வானளாவப் புகழ்ந்து கொண்டிருந்தார். அவரது பாடலின் கடைசி வரிகளில் உலகில் அவனுக்கு இணையானவர் யாருமே இல்லை என்று இருந்தது. அவனை விட அழகானவனோ, வீரனோ, கொடையாளியோ, செல்வம்



மிகுந்தவனோ எங்குமே இல்லை என்று அந்தக் கவிஞர் புகழ்ந்து தள்ளி இருந்தார்.

கவிஞர்கள் மன்னர்களை இப்படி எல்லாம் புகழ்வது இயல்பே. எனவே அந்தக் கவிஞர் இவ்வாறு கூறி முடித்ததும் சபையோர் ''ஆகா! பேஷ்! பேஷ்!! சபாஷ்!!!'' என்றெல்லாம் கூறிக் கைதட்டி ஆர்ப்பரித்தார்கள். கைதட்டலும், வாழ்த்துக்களும் சில நிமிடங்களுக்குப் பின் ஓய்ந்தபின் 'அஹ்ஹஹ்ஹா' என்று யாரோ பலமாகச் சிரித்த சத்தம் கேட்டது. யார் சிரித்தது என்று எல்லோரும் பார்த்தார்கள்.

அப்போது அமைச்சர், ''நான் தான். என்னால் சிரிப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை. இந்த மாதிரி இல்லாததை எல்லாம் இருப்பதாகக் கூறுபவர்களை மன்னனால் கூட அடக்க முடியாது. ஒரு குரங்கு தன் வாலை உயர்ந்ததாக நினைத்தால் அதை யாரால் தடுக்க முடியும்?'' என்று கேட்டார். மன்னனும் சபையோர்களும் எதுவும் கூற முடியாமல் மௌனமாக இருந்தார்கள். ஆனால் மன்னனுக்கு மட்டும் அமைச்சர் கூறியது சற்றும் பிடிக்கவில்லை.

ஒருநாள் மாலை மன்னன் அரண்மனைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தான். அப்போது ஓர் அணில் குதித்து வந்து அவன் முன் நின்றது. அது தன் முன்னங்கால்களில் ஒரு சிறு நாணயத்தை இடுக்கிக் கொண்டிருந்தது. அது ''என்னிடம் உள்ளது



மன்னனிடம் இல்லையே. அவனது வருத்தம் தோய்ந்த முகமே இல்லை என்கிறதே!'' என்று பாடியது.

அதைக் கேட்ட மன்னன் கோபம் கொண்டு ஒரு சிறு கல்லை எடுத்து அதனை அடித்தான். அணிலோ அடி படாமல் தப்பி ஓடியது. ஆனால் தான் வைத்திருந்த நாணயத்தை அங்கே போட்டுவிட்டது. மன்னன் அதைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு உரக்கச் சிரித்தான்.

அக்காலத்தில் சாதவர்கள் கலிங்கத்திலிருந்து வியாபாரம் செய்ய சுவர்ண தீவிற்குச் சென்று வந்து கொண்டிருந்தார்கள். ஒருமுறை மன்னன் மரக்கலத்தில் சுமத்திராவிற்குக் கிளம்பிய சில வியாபாரிகளை வழியனுப்ப மகாநதிக் கரைக்கு வந்தான். அந்த மரக்கலத்தின் உரிமையாளனிடம் சுமத்திரா மன்னனுக்குக்

# கலையும் கைவினைகளும்





ஒடிஸி என்ற சாஸ்திரீய நடனம் ஒரிஸ்ஸாவின் ஆலயங்களிலிருந்து வந்ததாகும். ஒரிஸ்ஸா அதன் கைவினைப் பொருள்களுக்குப் பெயர் பெற்றது. இவற்றில் ஃபிலிக்ரி என்பது குறிப்பிடத்தக்கது. நகைப் பெட்டிகள், கூடைகள், நகைகள், தட்டுகள் என்பன வேலைப்பாடுகளுடன் வெள்ளியில் செய்யப்படுகின்றன.

பட்டசித்திரா எனப்படுவது ஒரிஸ்ஸாவின் பழங்கால ஓவியக் கலையாகும். பிராணிகள், மலர்கள், பல தெய்வ உருவப் படங்கள் என்பன சிறப்பான முறையில் தயாரிக்கப்பட்ட துணியில் வரையப்பட்டு வண்ணங்கள் தீட்டப்படுகின்றன. பிப்லி என்பது யாவரையும் கவரும் மற்றொரு கலை. வண்ணத் துணிகளில் பறவைகள், மலர்கள், மிருகங்கள் ஆகியவற்றின் உருவங்களைக் கத்தரித்துத் துணிகளில் வைத்துத் தைப்பதுதான் இந்த சிறந்த கலை.

கொடுக்க ஒரு பரிசுப் பொருளைக் கொடுத்தான். அப்போது மன்னனைப் பூங்காவில் கண்டு பாடிய அணில் அங்கு வந்து கேலியாக ''என் செல்வத்தைக் கொள்ளை அடித்த மன்னனின் கொடை குணம்தான் என்னே!'' என்று பாடியது.

மன்னனுக்கோ கோபம் வந்தது. ஆனால் அதை எல்லோர் முன்னும் வெளிக்காட்ட முடியவில்லை. எதுவும் கூறாமல் பல்லைக் கடித்துக் கொண்டு நின்றான். அன்று மாலை மன்னன் அயல்நாட்டு தூதர் ஒருவருடன் பேசிக் கொண்டிருக்கையில் அதே அணில் அங்கு வந்து அதே பாட்டைப் பாடியது. இதனால் நிம்மதியை இழந்த மன்னன் அன்றிரவு தூங்கவில்லை.

மறுநாள் காலை அவன் தன் அமைச்சரிடம் ''நீங்கள் கூறியது சரியே. ஓர் அணிலைக் கட்டுப்படுத்தக் கூட என்னால் முடியவில்லையே?'' என்று மிகுந்த மனவேதனையுடன் கூறினான்.

அமைச்சரும், ''ஒருவனது அகங்காரத்தை அடக்க முடியாதுதான். வெகு சிலரே தான் என்ற எண்ணத்தை விட்டுவிட்டு அடக்கமாக இருக்கிறார்கள்,'' என்றார்.

அப்போது மன்னன், ''இந்த அணிலின் தொல்லையை என்னால் சகிக்க முடியவில்லை. அது சபையில் எல்லோர் முன்னிலையிலும் என்னை ஒரு திருடன் என்று கூறி அவமானப்படுத்தினால் நான் என்ன செய்வேன்?'' என்று பரிதாபமாகக் கேட்டான்.

அமைச்சரும் ''பூங்காவில் அந்த

அணில் போட்ட நாணயத்தை நீங்கள் அதனிடமே கொடுத்துவிடுங்கள்!'' என்று கூறினார்.

அடுத்தமுறை அணில் மன்னன் முன் வந்தபோது மன்னன்தான் பூங்காவில் எடுத்த சிறு நாணயத்தை அதன்முன் விட்டெறிந்துவிட்டுச் சென்றான். அணிலும் அதை எடுத்துக் கொண்டு எகிறி ஓடியது.

மன்னன் அத்துடன் விஷயம் முடிந்துவிட்டதாக எண்ணினான். ஆனால் மறுநாளே அணில் தர்பாருக் குள் குதித்து வந்து ஓர் ஆசனத்தில் அமர்ந்து ''பயந்து போன மன்னன் என் பொருளைக் கொடுத்துவிட் டானே!'' என்று உரக்கப் பாடியது.

அதைப் பலர் பிடிக்க முயன்ற போது அது தப்பி ஓடிவிட்டது. மன்னன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டான். அந்த அணி



லின் தொல்லை எப்போது தீருமோ என்று எண்ணிப் பெருமூச்சு விட்டான்.

தர்பார் முடிந்ததும் அமைச்சர் மன்னனிடம் ''இனி அந்த அணி லைப் பார்த்து சிரித்து 'உண்மையிலே உனக்கு நான் பயப்படுகிறேன்' என்று கூறிவிடுங்கள். தொல்லை தீர்ந்து விடும்,'' என்றார்.

மறுமுறை அணில் வந்தபோது மன்னன், ''சக்திவாய்ந்த அணிலே! நீயோ பெரியவன். சிறியோனாகிய என் மீது இரக்கம் கொள்!'' என்றான். அணில் இதைச் சற்றும் எதிர்பார்க்க வில்லை. பிறகு அது குதித்து ஆடிக் கொண்டே ஓடிப்போயிற்று. அதன் பிறகு அது மன்னன் முன் வரவே இல்லை.

அணில் சென்றபின் அமைச்சர் ''உலகில் யாருமே தன்னைப் பிறர் புகழ வேண்டும் என வேண்டும் என்றே விரும்புவார்கள். நீங்களும் அப்படி விரும்பினீர்கள். அணிலும் அதையே விரும்பியது. நீங்கள் அதைப் புகழ்ந்ததும் தொல்லை கொடுக்காமல் போய்விட்டது. புக ழைப் பெற மனிதன் மட்டும் ஆசைப் படவில்லை. எல்லாப் பிராணி களுமே ஆசைப்படுகின்றன. இது தான் உலக இயல்பு,'' என்றார்.

மன்னனும் ''நீங்கள் சொல்வது சரியே! நான் அணிலைப் புகழ்ந்தேன். அதனால் அது உச்சி குளிர்ந்துபோய் எனக்குத் தொல்லை கொடுக்காமல் போய்விட்டது,'' என்று கூறி அவ ரைப் பார்த்துக் குறுநகை புரிந்தான்.



# இதுவா, அதுவா?

தவளகிரியை தர்மபாலன் என்ற மன்னன் ஆண்டு வந்தபோது தலை நகரில் காசிநாதன் என்ற ஆயுர்வேத வைத்தியன் இருந்தான். வைத்தியத்தில் மட்டுமல்ல, ஓவியக்கலையிலும் அவன் கை தேர்ந்தவன். ஒருவனை ஒருமுறை பார்த்தாலே போதும், அவன் உருவத்தை வரைந்துவிடுவான்.

ஒருநாள் நள்ளிரவில் யாரோ இருவர் வந்து அவன் வீட்டுக் கதவைத் தட்டினார்கள். காசிநாதனும் எழுந்து வந்து கதவைத் திறந்து ''யார் நீங்கள்?'' என்று அவர்களை உன்னிப்பாகப் பார்த்தவாறே கேட்டான்.

அவர்களில் ஒருவன், ''ஐயா! நாங்கள் வெளியூர் வியாபாரிகள். சற்று முன் சில திருடர்கள் எங்களைத் தாக்கி எங்களிடம் இருந்தவற்றைப் பறித்துக் கொண்டு ஓடிவிட்டார்கள். நாங்களும் பயந்து ஓடினோம். அப்போது இவரை ஒரு நாய் கடித்து விட்டது. நாங்கள் ஒருவரை விசாரிக்கவே அவர் இந்த வீட்டைக் காட்டி இதில் வைத்தியர் இருப்பதாகச் சொன்னார். இவரது காயத்திற்கு மருந்து வைத்து கட்டுகிறீர்களா?'' என்று கேட்டான்.

அவனோடு வந்த மற்றவனின் முழங்காலுக்குக் கீழே காயம் ஏற்பட்டிருந்தது. காசிநாதன் அதற்கு மருந்து வைத்துக் கட்டினான். அவர்கள் நன்றி செலுத்திவிட்டு அவசரஅவசரமாகச் சென்றுவிட்டார்கள். ஆனால் பயத்தோடு வந்த அவர்களை காசிநாதன் உன்னிப்பாகப் பார்த்திருந்ததால் அவர்களது உருவப்படங்களை வரைந்து வைத்துக் கொண்டான். அவர்கள் ஏதோ குற்றம் செய்திருக்கிறார்கள் என்று அவன் மனம் எண்ணியது.

மறுநாள் அரசாங்க வீரர்கள் பறை சாற்றுவதை காசிநாதன் கேட்டான். முந்தின இரவில் தர்மபாலனைக் கொல்ல இருவர் கத்திகளுடன் மன்னனின் படுக்கையறை வரை

- பாபநாசம் சாமா -



வந்தார்கள் என்றும் காவல் வீரர்கள் அவர்களைப் பிடிக்க முயன்றபோது அவர்கள் ஓடிமதில் சுவர் மீது ஏறிக் கீழே குதித்து தப்பிவிட்டார்கள் என்றும் தெரிந்தது.

காசிநாதன் உடனேயே தான் வரைந்த இருவரின் உருவப் படங்களை எடுத்துக் கொண்டுபோய் நகரக் காவலதிகாரியிடம் காட்டி அவர்களில் ஒருவனின் காலில் ஏற்பட்ட காயத்திற்குத்தான் மருந்து வைத்துக் கட்டியதைக் கூறினான். உடனே அவன் சில வீரர்களுக்கு அந்தப் படத்தை காட்டி அவர்களைத் தேடிப் பிடிக்கும்படிக் கட்டளை இட்டான். சிறிது நேரத்திலேயே வீரர்களும் அவர்களைப் பிடித்துவிட்டார்கள். மன்னன் விசாரணை நடத்தி அவர்களுக்குத் தூக்கு தண்டனை விதித்தான். அவர்களைப் பிடிக்க உதவிய காசிநாதனுக்கு பெரும் தொகையையும் ஏராளமான பரிசுகளையும் அளித்தான்.

இதனால் காசிநாதன் சிறந்த ஓவியன் என்று நாடெங்கும் தெரிந்துவிட்டது. எனவே பல பணக்காரர்களும் பிரபுக்களும் தம் உருவப் படங்களை வரைந்து கொடுக்க வேண்டும் என்று அவனிடம் வந்தார்கள். காசிநாதனும் உற்சாகத்துடன் அந்த வேலைகளை ஏற்றுக் கொண்டான். பணமும் நிறையக் கிடைக்கவே அவன் வைத்தியத் தொழிலில் அதிகக் கவனம் செலுத்தாமல் இருந்தான். இதனால் அவனிடம் வரும் நோயாளிகள் குறைந்து போயினர். அவன் அதுபற்றி கவலைப்படவில்லை. அவனுக்குத்தான் சித்திரம் வரைந்து கொடுப்பதில் நல்ல வருமானம் வந்து கொண்டிருந்ததே.

தவளகிரியின் அண்டை நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டதால் அந் நாட்டிலிருந்து மக்கள் செழுமையாக இருந்த தவளகிரிக்கு வரலானார்கள். அப்படி வந்தவன்தான் விநாயகன் என்ற இளம் வயது வைத்தியன். அவன் காசிநாதன் ஒரு நல்ல வைத்தியர் எனப் பலர் சொல்லக் கேட்டிருந்தான். ஆனால் அத்தொழிலை அலட்சியப்படுத்திவிட்டு ஓவியத் துறையில் இறங்கிவிட்டதையும் அறிந்து கொண்டான்.

விநாயகன் தலைநகர எல்லையில் ஒரு பெரிய ஓட்டுவில்லை வீட்டை வாடகைக்கு எடுத்துக்



கொண்டு வைத்தியத் தொழிலை ஆரம்பித்தான்.

காசிநாதனிடம் வைத்தியம் பார்த்துக் கொண்டவர்கள் எல்லாம் அவன் வைத்தியதொழிலில் ஈடுபாடு காட்டாததுகண்டு விநாயகனிடம் வைத்தியத்திற்கு வந்தார்கள். இத னால் விநாயகனுக்கு நல்ல வருமான மும் கிடைத்து வந்தது. இப்படியே நாட்கள் கழிந்தன. காசிநாதனிடம் படம் வரைந்து கொள்ள வருவோரும் குறைந்து கொண்டே போகவே அவ னும் போதிய வருமானம் கிடைக் காமல் சிரமப்படலானான்.

ஒருநாள் என்ன செய்யலாம் என்று யோசித்தவாறே கால் போன போக் கில் அவன் சென்று கொண்டிருந் தான். ஊர் எல்லையில் ஒரு பெரிய ஓட்டுவில்லை வீட்டுத் திண்ணை யில் ஒருவன் உட்கார்ந்து கொண்டு இனிமையாக நாதஸ்வரம் வாசித்துக் கொண்டிருப்பதைக் கேட்டான்.

காசிநாதன் அவனருகே செல் லவே அவனும் பணிவாக எழுந்து வணங்கி ''நீங்கள் இங்கு வந்தது நான் செய்த பாக்கியம்,'' என்றான்.

பிறகு அவரை உபசரித்து உட்கார வைத்து ''உங்களை நான் அறிவேன். ஆனால் உங்களுக்கு என்னைத் தெரி யாது. என் பெயர் விநாயகன். வைத் தியத்தில் உங்களுக்கு இணையாக யாருமே இல்லை. எங்கள் நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டதால் இங்கு வந்து வைத்தியத் தொழிலை ஆரம்பித்தேன்,'' என்று அடக்கத் துடன் கூறினான்.

தனக்கு இவ்வளவு மரியாதை காட்டப்பட்டது கண்டு காசிநாதன் மகிழ்ந்துபோய் ''நீங்கள் மிக நன்றாக நாதஸ்வரம் வாசிக்கிறீர்களே,'' என்று கேட்கவே, விநாயகனும் ''என் தொழில் வைத்தியம் பார்ப்பதே. சிறுவயதில் இதை வாசிக்கக் கற்றுக் கொண்டேன். எப்போதாவதுதான் இதை எடுத்து வாசிப்பேன். வைத்தியம் செய்வதில் எனக்கு நல்ல வருமானம் கிடைக்கிறது. இதைப் பொழுது போக்காகவே கருதி வருகிறேன். ஆனாலும் என் நாதஸ்வர இசைக் கேட்கப் பல ரசிகர்கள் இருக்கிறார்கள். அவர்களைத் திருப்திப்படுத்துவதற்காக அவ்வப்போது இசைக் கச்சேரிகளும் செய்ய வேண்டியதாகிறது.

முன்பு எல்லாம் கச்சேரிகள் செய்து வைத்தியத் தொழிலைப் புறக்கணித்தேன். அதனால் என்னிடம் வைத்தியம் செய்துகொள்ள வருவோர் குறைந்தனர். நாட்டில் பஞ்சம் வந்து உணவிற்கே திண்டாடும்போது யார் இசைக் கச்சேரியைக் கேட்க வருவார்கள்? எனவே என்னுடைய நாட்டிலிருந்து இங்கு வந்து இந்த வைத்தியத் தொழிலை ஆரம்பித்தேன்,'' என்றான்.

அதைக் கேட்ட காசிநாதன் ''நானும் வைத்தியத் தொழில் செய்பவனே. எனக்கு ஓவியக் கலையில் ஈடுபாடு உண்டு. அதனால் என் கவனம் அதில் போய்விடவே நான் வைத்தியத் தொழிலை அலட்சியப் படுத்தி ஓவியங்களை வரைந்து கொடுத்து சம்பாதித்துக் கொண்டிருந்தேன். இப்போது அதில் வருமானம் கிடைப்பதில்லை. நீங்கள் கூறியது போல சித்திரம் வரைவதை பொழுது போக்காக வைத்துக் கொண்டு மறுபடியும் வைத்தியனாகிவிடுகிறேன். ஆனால் முன்புபோல இப்பொழுதும் நிறையப் பேர் என்னிடம் வருவார்களா என்ற சந்தேகம் எனக்கு ஏற்படுகிறது,'' என்றான்.

விநாயகனும், ''கண்டிப்பாக வருவார்கள். ஏனென்றால் இவ்வூரில் நாம் இருவரும் சேர்ந்தே வைத்தியத் தொழிலை நடத்தப் போகிறோம்,'' என்றான். அதுகேட்டு காசிநாதனின் மனம் மிகவும் நெகிழ்ந்தது.



# நம் இந்தியா

1. மகர சங்கராந்தி நம் நாட்டில் பல பகுதிகளில் பல்வேறு விதங்களில் கொண்டாடப்படுகிறது. கீழ்க்கண்டவற்றை சரியாக இணைக்கவும்.

| | |
|---|---|
| அ) பட்டம் பறக்க விடுதல் | 1. தமிழ்நாடு |
| ஆ) பொங்கல் சமைத்தல் | 2. கேரளம் |
| இ) ஒரு மலையில் உள்ள கோவிலுக்குச் செல்லுதல் | 3. குஜராத் |

2. புராணத்தில் குறிப்பிட்ட மன்னர் ஒருவர் தம் நாட்டிற்குத் திரும்பி வருவதை 10 நாட்கள் விழாவாகக் கொண்டாடுகிறார்கள். யார் அந்த மன்னர்?

அ) யுதிஷ்டிரர் ஆ) ஸ்ரீராமர்
இ) மகாபலி



3. இப்படத்தில் தென்படும் தலைவர் ஒரு விழாவிற்குப் புதிய திருப்பம் கொடுத்து அதைச் சமுதாயக் கொண்டாட்டமாகச் செய்தார். இதனால் மக்களின் தேசிய உணர்ச்சி ஊற்று பெருகியது. யார் இந்தத் தலைவர்? அந்த விழாவின் பெயர் என்ன?

4. மக்கள் குதூகலமாக இருப்பதாகக் காட்டப்பட்டுள்ள இப் படத்தில் இதன் தொடர்பில்லாததும் காட்டப்பட்டுள்ளது. அது என்ன?



5. முஸ்லிம்கள் எந்த நாளில் நபிகள் நாயகத்தின் மகன் ஹுசைனின் வீர மரணத்தை கொண்டாடுகிறார்கள்?

அ) ரம்ஜான்
ஆ) ஈத் உல் ஜுஹா
இ) ஈத் உல் ஃபிதர்

*(விடைகள் அடுத்த மாதம்)*

## ஜூலை மாத வினாக்களின் விடைகள்

1. பிரகஸ்பதி
2. ஆரியபட்டர்
3. விவசாயம்
4. மதன்மோஹன் மாளவியா, காசி ஹிந்து பல்கலைக்கழகம்
5. ரூர்கி பல்கலைக்கழகம்
6. டாக்டர் எல்.கே. அனந்தகிருஷ்ண அய்யர்



# விநாயகர்

கஜானன பண்டிதரின் வீட்டில் நல்ல கறவை மாடு இருந்தது. நந்தன் என்பவன் அதனை மேயவிட்டு நன்கு கவனித்து வந்தான். அதன் பாலைக் கறந்து பண்டிதருக்குக் கொடுத்து வந்தான். சுவரகேசரி இந்த நந்தனைத் தன் கைக்குள் போட்டுக் கொண்டு அவன் செய்ய வேண்டியதைக் கூறினான்.

கணேச நவராத்திரி பூசைக்காக தன் மகளையும், மாப்பிள்ளையையும், பேரன் கணேசபட்டனையும் அழைத்துவர பண்டிதரின் மனைவி கல்யாணி நகருக்குப் போயிருந்தாள். அவர்கள் வந்து சேர ஏனோ தாமதமாகிக் கொண்டிருந்தது.

கஜானன பண்டிதரின் இனிய கானத்தைக் கேட்டு இன்புற ஆயிரக்கணக்கான ரசிகர்கள் வாதாபி நகருக்கு வந்து சேரலாயினர். விழாவின் ஆரம்ப நாள் அது. சதுர்த்தியன்று ஆரம்பமாகும் அவ்விழாவில் முதலில் பாட வேண்டியவர் கஜானன பண்டிதரே. அன்று நந்தன், சுவரகேசரி ஒரு டம்ளரில் கொடுத்த நீர் கலந்த பாலை பண்டிதரிடம் கொடுத்தான்.

பண்டிதர் பாலில் நீர் கலந்திருப்பது கண்டு ''நந்தா! ஒருநாளும் இல்லாமல் இன்று பாலில் தண்ணீர் விட்டு ஏன் கொண்டு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டார்.

நந்தனோ, ''கடவுள் சாட்சியாக நான் பாலில் தண்ணீர் விடவில்லை!'' என்று கூறி மாய்மாலம் செய்தான். இதுவரை உரக்கப் பேசாத நந்தன் அப்படிக் கத்துவது கேட்டு சில பேர் அங்கு வந்து கூடிவிட்டார்கள்.



அவர்களில் சுவரகேசரியும் ஒருவன். அவன் சற்று தூரத்தில் நின்று சிரித்த வாறே வேடிக்கை பார்க்கலானான்.

கஜானன பண்டிதரும் ''நந்தா! இந்த அற்ப விஷயத்திற்குக் கடவுள் சாட்சியாக என்கிறாயா? அப்படி யானால் தூய மனதோடு சத்தியம் செய், பார்க்கலாம்!'' என்றார் கோபத்தோடு.

நந்தனுக்கும் கொஞ்சம் துணிவு ஏற்பட்டது. அவன் எதிர் அறையில் இருந்த விநாயகரின் முன்பக்கம் போய் நின்று நடுநடுங்கும் குரலில் ''நான் மட்டும் இந்தப் பாலில் தண்ணீர் கலந்திருந்தால் என் இரண்டு கைகளும் துண்டித்து விழட்டும். அப்படி இல்லாமல் என் மீது குற்றம் சாட்டப்பட்டது பொய்யானால் அந் தக் குரலே மீண்டும் பேச முடியாமல் போய்விடட்டும்,'' எனக் கூறி சத்தியம் செய்து எரிந்து கொண்டிருந்த விளக்கை அணைத்தான்.

கஜானன பண்டிதர் திடுக்கிட்டார். திடீரென தம் தொண்டை அடைத்துக் கொண்டதை உணர்ந்தார். உண்மை நிலையை அறிந்த சிலர் ''ஐயோ! இதென்ன?'' என மனவேதனைப் பட்டனர். சுவரகேசரியோ, ''பின் என்னவாம்? சத்தியம் செய்வது என்பது விளையாட்டா?'' என்றான்.

நந்தன் தன் கைகள் வேறுபட்டு விழாமல் போனது கண்டு மகிழ்ந்து சுவரகேசரியின் அருகே போய் நின்றான். இதே சமயம் பண்டிதரின் பேரன் கணேசபட்டன் ஓடோடி வந்து ''தாத்தா! வண்டியிலிருந்து இறங்கி எல்லோருக்கும் முன் நான் ஓடி வந்துவிட்டேன். பின்னாலேயே பாட்டியும் அம்மாவும் அப்பாவும் வந்து கொண்டிருக்கிறார்கள்,'' என் றான். ஆனால் அவர் எதுவும் பேசா மல் இருப்பது கண்டு திடுக்கிட்டான்.

அப்போது நடந்ததைச் சிலர் சொல்ல கணேசபட்டன் ''ஏய் நந்தா! எங்கே போகிறாய்? வா இங்கே!'' என்றான்.

சுவரகேசரியுடன் கிளம்பிச் செல்ல முயன்ற நந்தன் எதிர் அறைக்குள் விநாயகரின் முன் விளக்கு பளிச்சென எரிந்து கொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். கணேசபட்டனோ, ''நீ சரியாகச் சத்தியம் செய்யவில்லை. அதோ பார். விளக்கு இன்னமும் எரிந்து கொண்டே இருக்கிறதே. சரியாகச் சத்தியம் செய்,'' என்றான்.

கணேசபட்டனும் ''இதோ பார்!

எனக்குத் தெரிந்து நான் தண்ணீர் கலந்த பாலைக் கொடுக்கவில்லை. இது சத்தியம். இது உண்மையாக இல்லாவிட்டால் என் கைகள் துண்டித்து விழட்டும் என்று சொல்லி விளக்கை அணைத்து சத்தியம் செய்!'' என்றான்.

நந்தனுக்கு கைகால் நடுக்கம் ஏற்பட்டுவிட்டது. அவன் ''ஐயோ! நான் இந்த மாதிரி சத்தியம் செய்ய முடியாது. சுவரகேசரி பாலில் தண்ணீர் கலந்து என்னிடம் கொடுத்தது எனக்குத் தெரியுமே. நான் பாலில் தண்ணீர் விடவில்லை என்று தானே சத்தியம் செய்தேன். என்னை மன்னித்துவிடுங்கள்,'' என்று கூறிவிட்டு உள்ளே போய் சொம்பில் இருந்த நல்ல பாலை எடுத்து வந்து கணேச பட்டனிடம் கொடுத்து அவன் காலில் விழுந்து வணங்கினான்.

அங்குள்ளவர்கள் ''ஆ! இதுவா விஷயம்?'' எனக் கைதட்டிச் சிரித்தார்கள். சுவரகேசரி மெதுவாக நழுவலானான். சிலர் அவனைப் பிடித்து நிறுத்தினர்.

கணேசபட்டனும் ''பார்த்தீர்களா எப்படி மோசடி வேலை நடந்திருக்கிறது என்று?'' என்று அங்கு சுற்றிலும் நின்றவர்களைப் பார்த்துக் கேட்டான்.

எல்லோரும் ''ஆமாம்! அப்பாவி நந்தனைக் கொண்டு என்ன வேலை செய்துவிட்டான் இந்தப் பாவிப் பயல்!'' என்றனர்.

அப்போது கஜானன பண்டிதரின் குரலும் முன்போலச் சரியாகி




விட்டது. எல்லோரும் கணேச பட்டனைப் பாராட்டிக் கொண்டு இருக்கும்போதே வீட்டு வாசலில் வண்டி வந்து நின்றது.

அப்போது வண்டியிலிருந்து இன்னொரு கணேசபட்டன் குதித்து வருவது கண்டு ஆச்சரியப்பட்டு பண்டிதர் தம் அருகில் நின்ற சிறுவனைப் பார்த்தார். ஆனால் அவன் அங்கே இருக்கவில்லை. மாயமாய் மறைந்துவிட்டான். கஜானன பண்டிதரின் முகம் தாமரை போல் மலர்ந்து ''விநாயகா! நீயே வந்து என் கண்களைத் திறந்தாயே!'' என அவர் துதி செய்து பாடலானார்.

கணேசபட்டன் 'தாத்தா' எனக் கூவிக் கொண்டு வரவே பண்டிதரும் ''வாப்பா கணேசா!'' எனக் கூறித் தம் இரு கைகளை நீட்டி அவனைத் தூக்கி வாரி அணைத்துக் கொண்டார்.



பின்னர் அவர் ''விநாயகரின் அருள் நமக்குக் கிட்டிவிட்டது. சற்றுமுன் அவர் உன்னைப் போல உருவம் எடுத்து நம் வீட்டிற்கு வந்து இதனைப் புனிதமாக்கினார். இது அவரது ஆலயம்,'' என்று கூறிச் சிறுவன் போல ஆடிக் களித்தார்.

விநாயகரின் மீதான கீர்த்தனை களைத் தம் இனிய குரலில் பாட லானார். அந்த கான மழை பொழி வதைக் கேட்ட மக்கள் அங்கு வந்து கூடி ''ஆகா! என்ன இனிமை!'' என ரசிக்கலாயினர்.

சுவரகேசரியும் அந்த கானத்தைக் கேட்டு ஓடோடி வந்து கஜானன பண்டிதரின் கால்களில் விழுந்து ''என்னை மன்னித்ததாகக் கூறி னாலே தங்களது பாதங்களை விடு வேன்,'' எனக் கூறி அவரது கால் களை இறுகப் பிடித்துக் கொண்டு வேண்டினான். கஜானன பண்டிதர் திகைத்துப் போனார்.

சுவரகேசரியை கைலாகு கொடுத் துத் தூக்கி நிறுத்தி ''சுவரகேசரி! எனக்கு எதற்குத் தங்க விக்கிரகம்? நீயே சுவர்ண கணேச விக்கிரகத்தை அடைந்து கொள். எனக்கு அந்த மரியாதை வேண்டாம். இனிமேல் நான் இம்மாதிரிக் கூட்டங்களில் பாடவும் போக மாட்டேன்,'' என்றார்.

அப்போது சிறுவன் கணேச பட்டன், ''தாத்தா! நீங்கள் உங்கள் திருப்திக்காக வீட்டிற்குள்ளேயே இருந்து பாடினால் மட்டும் போதாது. பக்தியுடன் பிறர் மனம் மகிழ வைத்து அவர்களை ரசிக்குமாறும் செய் தாலே உங்கள் திறமைக்கு மதிப்பு,'' என்றான்.

கஜானன பண்டிதர் கை எடுத்துக் கும்பிட்டு ''விநாயகரே! நீங்கள் சொல்ல வேண்டியதை இந்தச் சிறுவன் வாயிலாகச் சொல்ல வைத்து எனக்கு அறிவுரை கூறுகிறீர்களா? ஆகா! நீங்கள் கூறுவது போலவே செய்கிறேன். ஆனால் என்னை யாரும் சிறப்பாக கௌரவிக்காமல் இருக்குமாறு மட்டும் செய்துவிடுங் கள்,'' என வேண்டினார்.

அப்போது அதைக் கேட்டுக் கொண்டு நின்ற சுவரகேசரி ''குரு தேவா! நீங்கள் இயற்றிப் பாடிய கீர்த்தனைகளை மற்றவர்களும் பாடி னால் சுவர்ண கணேச விக்கிரகம் கிடைக்கப் பெற்று மரியாதையை அடைகிறார்கள். இதுபோன்ற

பக்தியை நான் தங்களிடமும் காட்டி அதிர்ஷ்டம் அடையுமாறு அனுக்கிரகிக்க வேண்டுகிறேன்,'' என்றான்.

கஜானன பண்டிதருக்கு அறுபது ஆண்டுகள் நிறையவே அவரது சஷ்டியப்தப் பூர்த்தி விமரிசையாக கொண்டாடப்பட்டது.

அன்று மாலை வாதாபி கணபதி ஆலயப் பிரகாரத்தில் மாபெரும் கூட்டம் நடந்தது. அவர் கழுத்தில் மலர் மாலைகள் போடப்பட்டு மலை போல குவிந்தன.

அப்போது பல ராகங்களில் அவர் விநாயகரின் மீது பக்திப் பாடல்களைப் பாடினார். அன்று அந்தக் கீர்த்தனைகளைக் கேட்ட ஒவ்வொருவரின் உள்ளத்திலும் விநாயகர் குடி கொண்டு மனம் மகிழச் செய்தார். வாதாபி நகர வரலாற்றில் கஜானன பண்டிதர் நிலையான இடத்தைப் பெற்றுவிட்டார்.

இவ்வாறு பாவனமிசிரர் கூறிய கதையைச் சிறுவர்களும் வயதானவர்களும் கேட்டு ரசித்தார்கள்.

ஒருநாள் ஆலயத்தில் ஒரு விசித்திரமான ஓவியம் வரையப்பட்டிருப்பது கண்டு எல்லோரும் அதையே பார்க்கக் கூடிவிட்டனர். அது ஒரு விசித்திரமான பூத உருவம். அந்த சமயம் பாவனமிசிரர் அங்கு வரவே சிறுவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவரும் அதன் கதையை அவர்களுக்குச் சொல்லலானார்.

இந்திரன் சகர மன்னனின் யாகக் குதிரையை எங்கோ ஒளித்து வைத்து விட்டான். பிருது சக்கரவர்த்தியின்



யாகமும் நிறைவேறாமல் இருக்கவும் அவரது யாகக் குதிரையையும் திருடிக் கொண்டும் போனான். இப்படியாக பல அக்கிரமச் செயல்களை அவன் புரிந்தான்.

பிருது சக்கரவர்த்தியின் வம்சத்தில் பிறந்த அபிநந்தன் என்ற மன்னன் அச்சமயம் ஒரு யாகத்தைச் செய்ய லானான். அதில் இந்திரனுக்கு அவிர் பாகம் அளிக்கபட மாட்டாது எனவும் அவன் அறிவித்துவிட்டான். இத னால் இந்திரன் கோபமும் ஆத்திர மும் கொண்டு காலன் என்பவனுக்கு மது, மங்கை முதலிய ஆசைகளைக் காட்டி பிருது மன்னனின் யாகத்தை நடக்கவிடாமல் நாசம் செய்து வரு மாறு கூறி அனுப்பினான்.

காலன் மரணத்திற்கு அப்பாற் பட்டவன். எல்லா ஜீவராசிகளும் உயிர் வாழவும் இறக்கவும் அவனே காரணமாவான். அவனைக் கால தர்மன் என்றும் கால யமன் என்றும் கூட அழைப்பது உண்டு.

காலன் அந்த மன்னனின் யாகத் தீயிலிருந்து பயங்கர உருவம் ஒன்றை வெளிவரும்படிச் செய்தான். அது கண்டு யாகம் செய்து கொண்டிருந்த முனிவர்கள் பயந்து ஓடலானார்கள். யாகசாலையே நாசமாகிவிட்டது.

அபிநந்தன் விநாயகரின் பரம பக்தன். அவனது குரு வசிஷ்டரும், ''இந்த மாதிரி ஏதாவது நிகழக் கூடும் என எதிர்பார்த்து நான் யாக பீடத்தின் எதிரே சுவஸ்திக கணேசரைப் பிரதிஷ்டை செய்திருக்கிறேன். அங்கு மஞ்சளால் பிள்ளையாரைப் பிடித்து வைத்து வணங்கு. அவர் அவதரித்து இந்த பயங்கர உருவத்தை அழிப்பார்,'' என்றார். மன்னனும் அவ்வாறே செய்தான்.

அந்த சுவஸ்திகா சின்னத்தில் இருந்து இனிய நாதம் கேட்டது. அணுக்கள் ஒன்று சேர்ந்து மாபெரும் பூதம் ஒன்று உருவாகியது. அது பெரிதாகி எலிகளாக மாறின.

அந்தச் சுண்டெலிகள் பயங்கர உருவத்தின் மீது எறும்புகள் மொய்ப்பதுபோல மொய்த்துப் பிடுங்கிக் குதறி குற்றுயிராக்கி அதனை விழச் செய்தன. அதுவும் கீழே விழுந்து சட்டென மாயமாய் மறைந்தது.





# சந்திரன் முளைத்து வந்தான்!



பிரதாபபுரி மன்னனுக்கு ஒரே மகள் தான். அவள் பெயர் காமினி. அவளுக்கு பத்து வயதாகும்போது திடீரென ஏதோ நோய் கண்டது. அரசாங்க வைத்தியர் வந்து அவளை நன்கு பரிசோதித்தார். பிறகு அவர் மன்னனை அங்கு வரும்படி சொல்லி அனுப்பவே, அவனும் காமினியின் அறைக்கு ஓடோடி வந்தான்.

அப்போது வைத்தியர் இளவரசி யிடம், ''இதோ பாரம்மா! உன் மனது எதை விரும்புகிறது என்று சொல். அதை மன்னர் கொண்டு வந்து கொடுப்பார். நீயும் சந்தோஷப் படுவாய். உன் நோயும் மறைந்து விடும்,'' என்றார்.

அப்போது காமினி, ''அப்பா! எனக்கு வானத்தில் உள்ள சந்திரன் வேண்டும் அதைக் கொண்டு வாருங்கள்!'' என்றாள்.

மன்னனும் ''பூ, இவ்வளவுதானா! என்னால் முடியாதது என்று எதுவும் இல்லை. உனக்கு சந்திரனைக் கொண்டு வந்து கொடுக்கிறேன். கவலைப்படாதே!'' என்று கூறினான்.

அவன் உடனே சேனாதிபதியைக் கூப்பிட்டு அவனிடம் ''இளவரசிக்கு சந்திரன் வேண்டும். அது கிடைத் தாலே அவள் மகிழ்வாள். அவளது நோயும் போய்விடும். அதனால் நாளை மாலைக்குள் எப்படியாவது நீ சந்திரனைக் கொண்டு வர வேண்டும்,'' என்றான்.

சேனாதிபதியும், ''சந்திரனையா கொண்டு வருவது? முடியாதே. அது இங்கிருந்து ஐயாயிரம் மைல் தூரத்தில் அல்லவா உள்ளது. மேலும் அது இளவரசியின் அறையைவிட மிகமிகப் பெரியதாயிற்றே. அதை அங்கே கொண்டுபோக முடியாதே. தங்கத்தால் ஆன அதைக் தூக்கி வருவதும் சிரமம். இதை என்னால் செய்ய முடியாது என்று பணிவுடன் கூறிக் கொள்கிறேன்,'' என்றான்.

- கி. அருணா -



அதைக் கேட்ட மன்னன் கோபம் கொண்டு ''என்ன சொன்னாய்? என் மகள் சந்திரன் வேண்டும் என்று ஆசைப்படுகிறாள். அதைக் கொண்டு வா என்று நான் உன்னிடம் கூறினால் நீ உன்னால் முடியாது என்கிறாயே. உனக்குப் போய் நான் பதவியைக் கொடுத்தேனே. போ, போ! என் முன் நிற்காதே, போ!'' என்று கூறிவிட்டு ஆஸ்தான மந்திரவாதியை அழைத்து அவனிடம் விஷயத்தைக் கூறினான்.

மந்திரவாதியோ, ''சந்திரனையா இங்கு கொண்டு வரச் சொல்கிறீர்கள்? இதை யாராலும் செய்ய முடியாது. அது நம் பூமியிலிருந்து நாலாயிரம் மைல் தூரத்தில் உள்ளது. அது நம் அரண்மனையைப் போல பத்து மடங்கு பெரியது. மேலும் சந்திரன் வெண்ணெயால் ஆனது. இங்கே கொண்டு வந்தால் உருகிப்போய் உருத் தெரியாமல் போய்விடும். அதனால் என்னால் அதைக் கொண்டு வர முடியாது. மன்னியுங்கள்!'' என்று கூறினான்.

மன்னன் கோபத்தால் பற்களை 'நறநற'வென்று கடித்து ''நீயும் சேனாதிபதி போலக் கையாலாகா தவனா? சேனாதிபதி பலமிக்கவன் என்று எண்ணி அவனிடம் சந்திர னைக் கொண்டுவரச் சொன்னேன். அவன் தன்னால் முடியாது என்று கூறிவிட்டான். நீ மந்திர சக்தி வாய்ந் தவன் என எண்ணி உன்னிடம் சொன் னால் நீயும் முடியாது என்கிறாயே!'' என்று கூறி அவனை விரட்டினான்.

பிறகு அரசாங்க சோதிடரை வரச் சொல்லி அவரிடம் மன்னன் விஷ யத்தைக் கூறவே சோதிடரும் விரல் விட்டு எண்ணி ஏதோ கணக்குப் போட்டுப் பார்த்துவிட்டு ''பிரபுவே! சந்திரன் நம்மிடமிருந்து மூவாயிரத்து ஐநூற்று நாற்பத்து ஏழு மைல் தொலைவில் இருக்கிறான். அது பட்டையாய் சுண்ணாம்பும் மணலும் கலந்த காரைக் கலவையால் ஆனது. மேலும் அதை வானத்தில் இறுக ஒட்ட வைத்திருக்கிறார்கள். அதைப் பெயர்த்து எடுக்கவே முடியாது. அதனால் என்னாலும் அதை இங்கே கொண்டுவர முடியாது. என்னை மன்னியுங்கள்,'' என்றார்.

மன்னனும், ''நீரும் ஒரு சோதி டரா? போயும்போயும் உங்களிடம் போய் இதைக் கேட்டேனே!'' என்று கூறித் தன் தலையில் அடித்துக்

கொண்டான். சோதிடரோ மெதுவாக அங்கிருந்து நழுவிவிட்டார். மன்னன் இனியாரிடம் இதைச் சொல்வது என்று யோசிக்கையில் அங்கு ஆஸ்தான விதூஷகன் வந்தான்.

அவனைக் கூப்பிட்டு மன்னன் விஷயத்தைக் கூறி "சேனாதிபதி, மந்திரவாதி, சோதிடர் ஆகிய மூவருமே இது தம்மால் செய்ய முடியாது என்று கூறிவிட்டார்கள். உன்னைத்தான் நம்பி இருக்கிறேன். நீ போய்ச் சந்திரனைக் கொண்டு வருகிறாயா?" என்று கேட்டான்.

விதூஷகனும், "ஆச்சரியமாக இருக்கிறதே! அவர்கள் மூவரும் மகா புத்திசாலிகள் ஆயிற்றே. சந்திரன் மிகப் பெரியவன் என்றும் அவனை இருக்கும் இடத்திலிருந்து அசைக்கக் கூட முடியாது என்றும் ஏதோ சாக்கு சொல்கிறார்கள். மேலும் அவர்கள் என்னவோ சந்திரன் வெகுதூரத்தில் இருப்பதாகத் தமக்குத் தெரிந்ததைச் சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். ஆனால் அவர்கள் இளவரசியிடம் அது எப்படி இருக்கிறது, எவ்வளவு தூரத்தில் உள்ளது என்றெல்லாம் ஏன் கேட்கவில்லை? அதுதானே முக்கியம். நான் போய் அவளிடம் கேட்டு வருகிறேன்," என்று கூறி விட்டு இளவரசியின் அறைக்குள் சென்றான்.

விதூஷகனைப் பார்த்ததும் அவள் "சந்திரனைக் கொண்டு வந்துவிட்டீர் களா?" என்று ஆவலுடன் கேட்டாள். விதூஷகனும், "அதைக் கொண்டு வருவது சுலபமே. அதற்குமுன் அது



எவ்வளவு தூரத்தில் உள்ளது, எந்த வடிவில் உள்ளது, எதனால் செய்யப் பட்டது என்ற விவரங்களை எல்லாம் நான் உன்னிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும். நீ சொல் கிறாயா? என்று கேட்டான்.

அந்த இளவரசியும், "சந்திரன் என் சுண்டு விரல் நகத்தின் அளவில் இருப்பான். இந்த ஜன்னலில் இருந்து தெரியும் மரத்தின் உயரத் தொலை வில் இருக்கிறான். தங்கம் போலப் 'பளபள'வென்று பிரகாசிப்பது என இவைதான் சந்திரனைப் பற்றிய விவரங்கள் தெரிந்ததா?" என்று கேட்டாள்.

விதூஷகனும், "இன்றிரவே நீ கூறிய மரத்தின் மீது ஏறி அதன் உச்சாணிக் கொம்பில் உள்ள சந் திரனைப் பறித்து வந்துவிடுகிறேன்,"

எனக் கூறிவிட்டுச் சென்றான். அவன் அப்போதே அரண்மனையின் ஆஸ்தான பொற்கொல்லனைக் கண்டு இளவரசியின் சுண்டுவிரல் நகத்தை விடச் சற்று பெரிதாய் தங்கத்தில் சந்திரனைச் செய்து கொடுக்கும்படிக் கூறினான்.

அவனும் அதைச் செய்து ஒரு தங்கச் சங்கிலியில் கோர்த்துக் கொடுத்தான். விதூஷகன் அந்தச் சங்கிலியை எடுத்துக் கொண்டு இளவரசியைக் கண்டு ''இதோ நீ கேட்ட சந்திரன். உன் சுண்டு விரல் அளவு தான் இருக்கிறான். நீ ஜன்னல் வழியாகப் பார்க்கும் மரத்தின் உச்சியில் தான் முளைத்திருந்தான். இவனை நான் ஒரு மலரைப் பறிப்பதுபோலப் பறித்து எடுத்து வந்துவிட்டேன்,'' எனக் கூறி தங்கச் சங்கிலியைக் கொடுத்தான்.

அதைக் கண்டு இளவரசி மகிழ்ந்து ''ஆகா! மரத்திலிருந்து சந்திரனைப் பறித்து வந்தீர்கள். இது செடியிலிருந்து ஒரு மலரைப் பறிப்பது போலத் தானே. இது என் சந்திரன் நாளைக்கு மரக்கிளையில் இன்னொரு சந்திரன் முளைக்கும். அது எனக்கு வேண்டாம். என் சந்திரன் எனக்குக் கிடைத்துவிட்டான். இது போதும்,'' என்று கூறி மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்து நின்றாள்.

விதூஷகனும், ''ஆமாம். நீ கூறிய படி நாளைக்கும் அதன் பிறகும் கூட சந்திரன்கள் செடிகளில் மலர்கள் வருவது போல முளைத்து வருவார்கள். அவற்றை மற்றவர்கள் பறித்துக் கொண்டு போகட்டும்,'' என்றான்.

இளவரசியும் ''நான் அதுபற்றிக் கவலைப்பட மாட்டேன். எனக்குத் தான் என் தங்கச் சந்திரன் கிடைத்து விட்டானே!'' என்று கூறி தான் சற்று முன் அணிந்து கொண்ட தங்கச் சங்கிலியில் கோர்க்கப்பட்ட சந்திரனைப் பார்த்தாள்.

விதூஷகன் மன்னனைப் பார்த்து ''அரசே, பார்த்தீர்களா! சேனாதிபதியாலும், மந்திரவாதியாலும், சோதிடராலும் கொண்டுவர முடியாத சந்திரனை நான் கொண்டு வந்துவிட்டேன்,'' எனக் கூறி விஷமச் சிரிப்பு சிரித்தான். மன்னனின் மகிழ்ச்சிக்கோ அளவே இல்லை!



# அமாவாசை ஆரம்பமான கதை

வெகுகாலத்திற்கு முன் தென்னிந்தியாவில் இருந்த ஒரு தம்பதியருக்குக் குழந்தையே பிறக்காமல் இருந்தது. அதனால் அவர்கள் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அப்போதெல்லாம் சந்திரன் முழு வடிவில் தினமும் ஆகாயத்தில் தோன்றிக் கொண்டிருந்தான். ஒருநாள் அத் தம்பதிகளில் மனைவி நிலா வெளிச்சத்தில் உட்கார்ந்து கொண்டு தன் கணவன் எப்போது வருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவள் வானத்துச் சந்திரனைப் பார்த்து, ''ஆகா! நீதான் ஆகாயத்திற்கு எவ்வளவு அழகான குழந்தை! பட்டு போன்ற உன் உடலை நான் மட்டும் தொட முடிந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவேன் தெரியுமா?'' என்று சற்று உரக்கக் கூறினாள்.

அப்போது வானத்துச் சந்திரன் அவள் சொன்னதைக் கேட்டுவிட்டான். அவளைத் திருப்திப்படுத்த எண்ணி அவன் உடனே ஒரு குழந்தையாக மாறி அவள் உட்கார்ந்திருந்த ஜன்னலின் பக்கம் போய் அவளிடம், ''அம்மா! எனக்கு ஒரே பசி. ஏதாவது இருந்தால் கொடு!'' என்றான்.

அவளும், ''வா மகனே! உனக்குப் பாலும் சாதமும் கலந்து ஊட்டுகிறேன்,'' எனவே அவனும், ''ஆகா! ஜோர்! ஜோர்!!'' என்று கூறி அவள் ஊட்டிய சாதத்தை சாப்பிட்டுவிட்டுக் கிளம்பினான். அப்போது அவள், ''மகனே! நீ நாளையும் வருகிறாயா?'' என்று கேட்க, அவனும் ''ஆகா, வருகிறேனே!'' என்று சொல்லிவிட்டுப் போனான்.

மறுநாள் மாலையானதும் அவள் வானத்து சந்திரனின் வருகையை எதிர்பார்த்து நின்றாள். சந்திரனும் அவள் தன்பால் காட்டும் பரிவைக் கண்டு மகிழ்ந்து குழந்தை வடிவில் அவளருகே வந்தான். அன்றும் அவள்



பாலும் சாதமும் கலந்து ஊட்டினாள். இப்படியே பல நாட்கள் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

தன் மனைவியிடம் ஏற்பட்டு வரும் மகிழ்ச்சிகரமான மாற்றத்தைக் கண்ட அவளது கணவன் அதற்கு என்ன காரணம் என்று கேட்டான்.

அவளும், ''தினமும் சந்திரன் குழந்தை வடிவில் இங்கு வந்து நான்

ஊட்டும் பால் சாதத்தைச் சாப்பிட்டு விட்டுப் போகிறான்!'' என்றாள். அப்போது அவன், ''இதோபார். சந்திரன் உன் மகனாக ஆகிவிட முடியாது. சந்திரன் கடவுள். அதனால் உனக்குக் குழந்தை பிறக்க வேண்டும் என்று அவனிடம் வரம் கேள்!'' என்றான்.

அன்றிரவு சந்திரன் வழக்கம் போல வந்ததும் அவளும், ''உன் னிடம் ஒன்று கேட்கிறேன், கொடுப் பாயா?'' என்று கேட்டாள். சந்திர னும் ''அம்மா! உன் ஆசை என்ன?'' என்று கேட்டான். அவளும் ''நான் ஒரு குழந்தையைப் பெற்றெடுக்க வேண்டும். அந்த பாக்கியத்தை எனக்கு நீ வரமாகக் கொடுக்க வேண் டும்,'' என்று வேண்டினாள்.

சந்திரனும் ''நான் உனக்கு இந்த வரம் கொடுக்கிறேன். ஆனால் உனக்குக் குழந்தை பிறந்த பிறகு நீ என்னை மறந்துவிடக் கூடாது!'' என்றான்.

சந்திரன் கொடுத்த வரத்தின் படி அவள் குழந்தையைப் பெற்றாள். ஆனால் சந்திரனை அவள் மறக்கவில்லை. இப்படி யாகப் பல வருடங்கள் கழிந்தன. அந்தப் பெண்மணி நோயுற்றுப் படுத்துவிட்டாள். நோய் கடுமை யாகி அவள் நிலை மோசமானது. அப்போது அவள் தன் மகனிடம், ''நான் இறந்துவிடுவேன். நான் சந்திரனுக்குப் பால் சாதம் கொடுத்து வந்தது போல நீயும் கொடுத்து வா!'' என்று கூறிக் கண்ணை மூடினாள். அன்றிரவு சந்திரன் வந்ததும் அந்தப் பெண்மணி யின் மகன் பால் சாதத்தை எடுத்து வந்தான்.

சந்திரனோ, ''எங்கே அம்மா?'' என்று கேட்க, அம்மகனும் அவள் இறந்து போனதாகக் கூறினான்.

சந்திரனும் ''அம்மா ஆசை!'' என்று புலம்பியவாறே மறைந்து போனான். அன்று இருட்டே. அது முதல் ஒவ்வொரு மாதமும் அந்தப் பெண்மணி இறந்த நாளில் சந்திரன் வானத்தில் தோன்றவில்லை.

அத்தினங்களில் அவன் ''அம்மா, ஆசை'' என்று கூறிக் கொண்டு வானத்தில் தோன்றாமல் இருந்து விட்டான். அவன் கூறியதைக் கேட்ட வர்கள் ''அம்மா, ஆசை'' என்பதைச் சேர்த்து அமாவாசை என்று அத் தினத்தைக் குறிப்பிடலானார்கள்.





# பழி வாங்கினானா?

மங்களகிரிப் பகுதியில் கங்காளன் என்ற மந்திரவாதி இருந்தான். அவன் பல மந்திர, தந்திரங்களைக் கற்று இருந்தபோதிலும் அவற்றால் தனக்குப் பணம் சேர்த்துக் கொள்ள வில்லை. அவன் தன் மகன் ரங்க னுக்கு மந்திர, தந்திரங்களைக் கற்றுக் கொடுத்திருந்தான்.

ரங்கன் தன் தந்தையைப் போல இராமல் பல நாடுகளுக்குப் போய்த் தன் மந்திர வித்தைகளைக் காட்டி நிறைய சம்பாதித்துக் கொண்டுவர வேண்டுமென்று ஆசைப்பட்டான். அதனால் தன் தந்தையிடம் விடை பெற்றுக் கொண்டு அவன் பல நாடு களுக்குச் சென்றுவிட்டு சித்திரபுர நாட்டை அடைந்தான்.

சித்திபுர மன்னனுக்கு வெகு நாட்கள் வரை குழந்தையே பிறக் காமல் இருந்து அப்போது தான் ஓர் ஆண் குழந்தை பிறந்திருந்தது. அதன் ஜாதகத்தைக் கணித்த அரசாங்க சோதிடர் அக்குழந்தைக்கு ஒரு மந்திர வாதியால் ஆபத்து வரும் என்று கூறி இருந்தார். இந்த சமயத்தில் தான் ரங்கன் சித்திரபுர மன்னனைக் கண்டு தன் வித்தைகளை காட்டி மகிழ் விப்பதாகக் கூறினான்.

சித்திரபுர மன்னனுக்கு மந்திர வாதி என்றாலே எரிச்சலாக இருந் தது. வந்திருக்கும் மந்திரவாதியால் தான் தன் குழந்தைக்கு ஆபத்து வரப் போகிறது என்று மன்னன் எண்ணி ரங்கனை அன்றே கொன்றுவிடத் தீர்மானித்துவிட்டான்.

அவன் ரங்கனிடம், ''மந்திரவாதி யாரே! நாளை உங்களது வித்தை களைக் கண்டு களிக்கிறேன். இன் றிரவு என் விருந்தினர் விடுதியில் தங்கி உண்டு களித்து உறங்குங்கள்,'' என்று பணிவாக வேண்டினான்.

ரங்கனும் அன்றிரவு மன்னனின் விருந்தினர் விடுதிக்குச் சென்றான். அவனது உண்ணும் உணவில் மன் னன் விஷத்தைக் கலந்துவிட்டான். அந்த உணவை உண்ட ரங்கன்

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் பிரசுரமான கதை



சற்றுநேரத்திலேயே இறந்துவிட்டான். மன்னன் அவனது உடலை ரகசியமாகப் புதைத்துவிட்டான்.

ரங்கனிடமிருந்து அவ்வப்போது கங்காளனுக்குத் தகவல்கள் வந்து கொண்டிருந்தன. ஆனால் சித்திர புரத்தை அடைந்தபின் ரங்கனிடமிருந்து எந்தத் தகவலும் வராமல் போகவே கங்காளன், ரங்கனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்திருக்கிறது என்று சந்தேகப்பட்டான். எனவே அவன் சித்திரபுரத்திற்குப் போய் ரங்கனைப் பற்றி விசாரித்தான்.

ரங்கன் அந்நாட்டு மன்னனைக் கண்ட மறுநாளே எங்கே போனான் என்று தெரியவில்லை எனப் பலர் கூறினார்கள். மன்னனுக்கு மந்திரவாதி என்றாலே பிடிக்காது என்பதையும் அவனது குழந்தைக்கு மந்திரவாதி ஒருவனால் ஆபத்து என சோதிடர் அவனிடம் கூறியதையும் கங்காளன் தெரிந்து கொண்டான்.

இதனால் மன்னன் தான் ரங்கனைக் கொன்றவன் என்பது கங்காளனுக்கு விளங்கிவிட்டது. காரணமில்லாமல் தன் மகன் ரங்கனைக் கொன்ற மன்னனை பழிக்குப் பழி வாங்குவது என கங்காளன் தீர்மானித்தான்.

மன்னன் தன் குழந்தையின் பிறந்தநாளைக் கொண்டாடும்போது கங்காளன் எல்லோர் கண்களிலும் மண்ணைத் தூவி மன்னனின் குழந்தையைக் கவர்ந்து கொண்டு மங்களபுரிக்கு வந்தான். அக்குழந்தை அணிந்திருந்த நகைகளையும் ஆடைகளையும் கழற்றி அவன் ஒரு பெட்டியில் பத்திரமாக வைத்தான். பிறகு அக்குழந்தையை அவனே வளர்த்து வரலானான்.

சித்திரபுர மன்னன் தன் குழந்தையை இழந்து தவியாய்த் தவித்தான். அக்குழந்தைக்குப் பின் வேறு ஒரு குழந்தையும் அவனுக்குப் பிறக்கவில்லை.

இப்படியே பதினாறு ஆண்டுகள் கழிந்தன. கங்காளன் தான் வளர்த்த அரசகுமாரனோடு ஒரு பெட்டியையும் எடுத்துக் கொண்டு சித்திரபுரத்திற்கு வந்தான். அரசகுமாரனிடம் அந்த சிறு பெட்டியைக் கொடுத்து "இதை இந்நாட்டு மன்னனிடம் கொடு. அவர் உனக்கு நல்ல வெகுமதி அளிப்பார்," என்று கூறி அனுப்பினான்.

அவனும் தர்பாருக்குப் போய் ''அரசே! இது தங்களுக்குக் கொடுக்கப்படும் பரிசு,'' எனக் கூறி தான் கொண்டு வந்த பெட்டியை மன்னனிடம் கொடுத்தான்.

பெட்டியைத் திறந்து பார்த்த மன்னன் அதில் காணாமல் போன தன் குழந்தையின் நகைகளையும் ஆடைகளையும் கண்டு கடுங்கோபம் கொண்டு ''என் குழந்தைக் கவர்ந்து சென்றவன் இவன் தான். இவனைப் பிடித்து தூக்கில் போடுங்கள்,'' என்று கட்டளை இட்டான்.

அப்போது அமைச்சர் குறுக்கிட்டு ''அரசே! சற்றுப் பொறுங்கள். அந்தப் பெட்டியில் இன்னும் என்ன இருக்கிறது என்று பார்க்கலாம்,'' என்றார்.

மன்னனும் பெட்டியை அவரிடம் கொடுக்கவே, அவர் பெட்டியில் இருந்ததை எல்லாம் வெளியே எடுத்தார். அடியில் ஒரு கடிதம் இருந்தது. அதில் ''மன்னா! இக்கடிதத்தை நீ படிக்கும்போது உன் மகனை இழந் திருப்பாய். ஏனெனில் இந்தப் பெட்டியை உன்னிடம் கொடுத்தவன் உன் மகன். சிறு குழந்தையாக இருந்தபோது அவனைக் கவர்ந்து சென்றவன்நானே. என் மகன் ரங்கனை நீ கொன்றதற்கு நான் இப்போது பழி வாங்கிவிட்டேன்,'' என்று எழுதப்பட்டிருந்தது.

அமைச்சரும் ''அரசே! நீங்கள் அவசரப்பட்டு சற்றும் யோசிக்காமல் இவனைக் கொல்ல இருந்தீர்கள். நல்லவேளையாக நான் குறுக்கிட்டதால் தங்கள் மகன் தப்பினான்,'' என்றார்.

மன்னனும் ''நான் அவசரப்பட்டு என் மகனை இழக்க இருந்தேன். நீங்கள் தாம் அவனைக் காப்பாற்றினீர்கள்,'' என்று அமைச்சரிடம் கூறினான்.

அத்துடன் தன் மகனை அதுவரை வளர்த்த கங்காளனை அரண்மனைக்கு வரவழைத்து ''நீ என் மகனை இவ்வளவு நாட்களாக வளர்த்துப் பெரியவனாக்கினாய். அதற்கு உனக்கு நன்றி செலுத்துகிறேன். உன் மகனைக் கண்மூடித்தனமாகக் கொன்றதற்காக என்னை மன்னித்துவிடு,'' என்று கூறி அவனைத் தன்னுடனேயே இருந்து வரும்படியும் ஏற்பாடு செய்தான்.



# சூர்யா

வீர இளவரசனின்
துணிகரச் செயல்கள்

சுமேத நாட்டுத் தலைநகர் சாந்திபுரம்
மிகவும் அமைதி நிலவும் நகரம்.
இதனை ஆண்ட மன்னர்கள்
மக்களைச் சுகமாக வாழச்
செய்தார்கள். தற்போதைய மன்னன்
சாந்திதேவன். அவன் தன்
உறவினனும் சேனாதிபதியுமான
வீரசிம்மனை வரச் சொன்னான்.










வீரசிம்மனுக்கு பணம், சொத்து
ஆகியவற்றின் மீது பேராசை.
அவன் படைத் தலைவர்களை
ரகசியமாகக் கூட்டினான்.

வீரர்களாகிய நமது
முதல் கடமை போர் புரிவதே.
அதை மறந்துவிடாதீர்கள்!





உஷ்! சுவர்களுக்குக் கூட காது உண்டு. ஜாக்கிரதை!
இந்த ரகசியக் கூட்டம் நடந்ததைக் கண்ட ஒரு வீரன் ஆச்சரியப்பட்டான்.
அரசே! நள்ளிரவு வரை அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.
இதனை மன்னரிடம் தெரிவிக்க வேண்டும்.
ஒருவேளை அவர்கள் இளவரசனின் பிறந்தநாளைக் கொண்டாடுவது பற்றிப் பேசி இருக்கலாம். சரி இந்தக் கூட்டம் நடந்ததை வேறு யாரிடமும் கூறாதே!
அப்படியே அரசே! இன்னும் ஏதாவது தெரிய வந்தால் உடனே வந்து தங்களிடம் சொல்கிறேன்.


சாந்திபுரத்தில் இளவரசனின் பிறந்தநாளைக் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்பட்டன.
எங்கு பார்த்தாலும் மாவிலைத் தோரணங்கள்.
இளவரசனுக்குப் பரிசு வழங்க மக்கள் கூட்டம் வந்தது.
ஆஹா! அரண்மனைத் தலைவாசலில் காவல் காக்கும் ஒரு வீரன் கூட இல்லை.
மகாராணியாரே! இளவரசர் நீண்ட காலம் ஆரோக்கியமாய் வாழ இறைவன் அருள் புரியட்டும்.
எங்கு போய் வந்தாலும் தடுத்து நிறுத்த யாருமே இல்லை!
ஆடல்பாடல்களில் மக்கள் மெய்மறந்து போனார்கள். எங்கு என்ன நடக்கிறது என்று யாரும் அறியவில்லை.

மிகவும் களைத்துப் போய்விட்டேன். சற்று இளைப்பாறுகிறேன்.

மன்னன் மகாராணியின் மாளிகைக்குள் அவசர அவசரமாக ஓடி வந்தான்.

பிரபுவே! என்ன விஷயம்?

பணிப் பெண்களை வெளியே போகச் சொல்.

பிரபுவே! நான் எங்கே போக வேண்டும் என்பதைக் கூறுங்கள்.

நம் உயிருக்கே ஆபத்து. நீ இப்போதே நம் குழந்தையுடன் தப்பிச் செல். ரகசிய வழியில் உடனே போ!

தொடரும்

# கேளிக்கை நேரம்

ஆ! இந்த இரு படங்கள் ஒன்றுபோலத் தென்பட்டாலும் எட்டு வேறுபாடுகள் உள்ளன. அவற்றைக் கண்டுபிடியுங்கள்!

1





2

இதற்கு ஏற்ற வண்ணங்கள் தீட்டி அழகுபடுத்துங்கள்!



அடேயப்பா! ஒரே முதலைகளாக உள்ளனவே. இவற்றில் எது நீளமானது என்று சொல்லுங்கள்!

(விடைகள் 66ம் பக்கத்தில்)

3





வாக்கியம் உருவாக்குங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி



Soura



Soura

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு அக்டோபர் 2003 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

ஜூன் 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

திருமதி. ஏ. ஜெயஸ்ரீ

No.3-G/95, ஃப்ளாட்.201, சுமன் அபார்ட்மெண்ட், கோரேபேட், நாக்பூர் – 440 010.

பரிசு பெற்றவை





கவனமுடன் தொழிலில் ஈடுபாடு

களிப்புடன் விளையாட்டில் ஈடுபாடு

**கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)**

1. குள்ளநரி வால் அருகே உள்ள கூழாங்கற்கள், 2. சட்டைப் பை, 3. குள்ளநரி வால், 4. வெட்டுக்கிளியின் சட்டை, 5. வலதுபுற இலைகள், 6. அடிமரத்தின் கோடுகள், 7. குள்ளநரிக்கும் வெட்டுக்கிளிக்கும் மத்தியில் கிடக்கும் கூழாங்கற்கள், 8. இடதுபுற இலை.
2. ஐந்து முதலைகள் உள்ளன. D முதலை தான் நீளமானது.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

